# பொய்யும் மெய்யும்



க. சந்தானம் M.A., B.L.








தினசரி வெளியீடு—3

விற்பனை உரிமையாளர்:

சக்தி காரியாலயம்

சென்னை : : மதுரை

காதல், குடும்பம், மதம், அரசியல், கல்வி, தொழில் முதலிய சகலத்திலும் பொய்யும் மெய்யும் கலந்திருக்கின்றன. பொய்யை விலக்கி மெய்கண்ட உயர் வாழ்வு வாழ்வதெப்படி என்பதை, தெளிவாய் விளக்குகிறார் ஆசிரியர் க. சந்தானம். அவர் சுய சிந்தனையும் தெளிந்த கருத்துக்களும் உள்ள தலைசிறந்த அறிஞர். அபூர்வமான சில சீர்திருத்தங்களைப்பற்றி அவர் சொல்லும் சில யோசனைகள், தமிழர் யாவரும் ஆழ்ந்து சிந்திக்கத் தக்கவை யாகும்.

இது 'தினசரி'யின் மூன்றாவது வெளியீடு.

முதல் பதிப்பு: 1944 நவம்பர் 15


அணா நாலு

சக்தி பிரஸ் லிமிடெட்
(சாந்தி பிரஸ்)
ராயப்பேட்டை :: சென்னை

# பொய்யும் மெய்யும்

## அத்தியாயம் 1



### முகவுரை

இப்புவனமெல்லாம் பொய்யும் மெய்யும் கலந்த மாயை என்பது ஆதி சங்கரர் முடிவு. தத்துவத்தைப் பற்றிய இந்த வேதாந்த சித்தாந்தத்தை நாம் இங்கு ஆராயப் புகவில்லை. ஆனால் நமது தினசரி வாழ்க்கையிலும் பொய்யும் மெய்யும் பின்னிக்கிடக்கின்றன. சுத்த சத்திய நிலையில் மானிட வாழ்க்கை சாத்தியமில்லை; எந்த வாழ்க்கையும் முழுப் பொய்யாக இருக்கமுடியாது. இக் கலப்பு நிலையைப் பற்றிச் சிந்தித்து நாளுக்குநாள் மெய் வளருமாறும் பொய் குறையுமாறும் முயல்வதே தனி மனிதர்களுக்கும் சமூகங்களுக்கும் லக்ஷியமாக இருக்கவேண்டும்.

### பகுத்தறிவு

பொய்யும் மெய்யும் பகுத்தறிவின் பலாபலன்கள். மனிதனைப் போலவே மற்றுப் பிராணிகளுக்கும் இந்திரியங்கள் இருக்கின்றன. பசியும் தாகமும், காமமும் குரோதமும், பயமும் சாவும், எல்லா ஜீவன்களுக்கும் பொதுவான உணர்ச்சிகள். ஓரளவு மனமும் (ஆராயும் சக்தி) மிருகங்களிடம் காணப்படுகின்றது. தம்மைப் போஷிப்பவர்களிடம் அன்பும், துன்புறுத்துபவர்களிடம் வெறுப்பும் கொள்வதைப் பிரத்தியக்ஷமாகப் பார்க்கின்றோம். ஆனால் மனிதனைத் தவிர வேறு எந்தப் பிராணியும் தன் அனுபவத்தைத் தன்னிடமிருந்து வேறாகப் பிரித்து அதைப்பற்றிச் சிந்திப்பதில்லை. தன்னைச் சாக்ஷியாகவும், கர்த்தாவாகவும் எண்ணி, "நான் இதை அனுபவிக்கிறேன்", "நான் இதைச் செய்கிறேன்" என்று தனக்குள் வேறு எந்தப் பிராணியும் சொல்லிக்கொள்வதில்லை.

பிரத்தியக்ஷ அனுபவத்தால் சுகமுண்டாகலாம், துக்க முண்டாகலாம். ஆனால் அதில் பொய்யுமில்லை, மெய்யுமில்லை. அந்த அனுபவத்தைத் தனியாகப் பிரித்து, முன் அனுபவங்களோடும், பின் எதிர்பார்க்கும் அனுபவங்களோடும் நோக்கும்பொழுது தான் அவைகளுக்கு இடமேற்படுகிறது.

பகுத்தறிவின் வேலையை இரண்டு பெரிய பாகங்களாக வகுக்கலாம். நமது பிரத்தியக்ஷ அனுபவங்களையெல்லாம் ஒழுங்காக வகுத்து அவற்றின் பொது சுபாவங்களை நிர்ணயிப்பது முதல் வேலை. நமது காரியங்களையும் அவற்றின் பலன்களையும் ஆராய்ந்து சிலவற்றைச் செய்வது நலம், சிலவற்றைச் செய்யாமலிருப்பது நலம் என்ற விதிகளை அமைத்துக்கொள்வது இரண்டாவது வேலை. முதல் வேலையின் பலன் அறிவும், சாஸ்திரங்களும்; இரண்டாவதின் பலன் தர்மமும், சமூக வாழ்க்கையும்.

### பாஷை

இவ்விரண்டுவித பிரவிருத்திகளுக்கும் ஆதாரமாக இருப்பது மொழி. மொழியும் சிந்தனையும், உடலும் உயிரும் போன்றவை.

சிந்தனையில்லாத சொல்லுண்டு. சொல்லில்லாத சிந்தனையில்லை. சிந்திக்கும் இந்திரியத்தை மனம் என்று சொல்லுவார்கள். ஆனால் உண்மையில் அதை மூளை என்று சொல்லவேண்டும். நமது ஞானேந்திரியங்களின் உணர்ச்சிகளுக்கும், கர்மேந்திரியங்களின் காரியங்களுக்கும் பெயரிட்டு, அப் பெயர்களின் மூலம் அநுபவங்களையும், அவற்றின் சம்பந்தங்களையும் ஒழுங்காக ஒரு பூகோளப் படம்போல் அமைப்பதே மூளையின் வேலை. எவ்வாறு ஓரிடமிருந்து மற்றோர் ஊருக்குப் போக விரும்புகிறவன் பிரதேசப் படத்தைப் பார்த்து, திக்கு, தூரம், வழியில் கடக்கவேண்டிய ஆறு, காடு, மலை முதலியவற்றை அறிகிறானோ அவ்விதமே ஒரு விஷயத்தை அறியும்பொழுதும், ஒரு காரியத்தைச் செய்யும்பொழுதும், நமது மூளையிலிருக்கும் படங்களை உபயோகிக்கின்றோம். முன்னாட்களில் இந்தப் படங்கள் அனைத்தையும் ஒருவன் தன் மூளையிலேயே தூக்கிச் செல்லவேண்டியிருந்தது. இக்காலத்திலோ அவைகளை அச்சிட்டு அலமாரியில் வைக்கின்றோம். அந்தப் படங்களை உபயோகப் படுத்தும் சாமர்த்தியம் பெறுவதே மூளையின் முக்கிய வேலையாகி விட்டது. ஒரு சிறிய அறைக்குள் உட்கார்ந்துகொண்டு, நட்சத்திரங்களின் போக்கையும் அணுக்களின் ரகஸ்யங்களையும் விஞ்ஞானிகள் ஆராய்கின்றனர்.

மொழிக்கும் சிந்தனைக்கும் இவ்வித இணைபிரியாத தொடர்பு இருப்பதால் சொற்களைச் சரியாக உபயோகப்படுத்தாமல் இருப்பதாலும், அர்த்தமற்ற சொற்களை உபயோகப்படுத்துவதாலும் பல அனர்த்தங்கள் விளைகின்றன. பகவத்கீதைக்கும் பிரம்ம சூத்திரத்திற்கும் பெரிய ஞானிகளான சங்கராச்சாரியார், ராமானுஜாச்சாரியார் முதலியவர்கள் வெவ்வேறு பாஷியம் செய்வதற்குக் காரணம் வேதத்தில் காணும் சொற்களுக்கு வெவ்வேறு அர்த்தங்கள் கொள்வதேயாகும். தர்க்கம் செய்யும்பொழுதெல்லாம் ஒரே பதங்களுக்குப் பல அர்த்தங்கள் வைத்துப்பேசுவதால் குழப்பம் ஏற்படுவதைச் சாதாரணமாகக் காணலாம்.

சொற்களின் அர்த்தங்கள் அவ்வப்போது மாறி வருகின்றன வென்பதை காந்தியடிகள் தமது அநாசக்தியோகம் என்ற பகவத்கீதை வியாக்யானத்தில் குறிப்பிட்டிருக்கிறார். பண்டைக்காலத்திருந்து வரும் பதங்களை உபயோகப்படுத்தும்பொழுது இவ்வுண்மையை முக்கியமாகக் கவனிக்கவேண்டும்.

### பிரமாணங்கள்

சத்தியம், தர்மம் இவ்விரண்டும் மனித அறிவின் பரிணாமங்கள். ஆதலால் அவற்றை நிர்ணயம் செய்வதற்கு முடிவான அதிகாரியும் நமது புத்திதான். நூற்றில் தொண்ணூற்றொன்பது பேர்கள் ஒரு விஷயத்தை சத்தியமென்று சொன்னால் அதனாலேயே அது நூறாவது மனிதனுக்குச்சத்தியமாகிவிடாது. அவனது அறிவு அதைத் தவறாக எண்ணலாம். முடிவில் அவன் எண்ணமே சரியென்று இந்தத் தொண்ணூற்றொன்பதுபேர்களும் ஒப்புக்கொள்ளலாம். முன்காலத்தில் பூமி தட்டையாக இருப்பதாகவும் சூரியனும் நட்சத்திரங்களும் அதனைப் பிரதக்ஷணம் செய்வதாகவும் நினைத்தார்கள். உண்மை அப்படியல்ல, பூமி வட்டமாக இருக்கிறது. அது சூரியனைச் சுற்றுகிறது. காபர்னிகஸ், கலிலியோ முதலியவர்கள் சொன்னபொழுது அவர்கள்பேரில் கிறிஸ்துவ சமயவாதிகள் சீறி விழுந்தார்கள்.

உண்மையை அறிவதற்கு முக்கிய பிரமாணங்கள் மூன்று என்று சொல்லுவது வழக்கம். பிரத்தியக்ஷம், அனுமானம், சாத்திரம். வெளியுலகத்தைப் பற்றியோ அல்லது மனித நிலைமையைப் பற்றியோ ஒரு தத்துவம் சொன்னால் அதன் உண்மையையும் பொய்யையும் அனுபவத்தினால் நிர்ணயிக்க வேண்டுமென்பது பிரத்தியக்ஷ பிரமாணம். முதல் தோற்றத்தில் இதுவே முடிவான பிரமாணமென்று தோன்றுகிறது. ஆனால் பல விஷயங்களில் பிரத்தியக்ஷ பிரமாணத்தை நேரில் உபயோகப்படுத்த முடியாது.

கோடானுகோடி மைல்களுக்கு அப்பால் இருக்கும் நட்சத்திரங்களைப் பற்றியும், மிகவும் நுட்பமான அணுக்களைப்பற்றியும் நேரில் அனுபவமிருக்க முடியாது. ஏதோ கருவிகளைக்கொண்டு சில விஷயங்களைக் கவனித்துச் சிக்கலான கணிதத்தின் மூலம் அனுமானங்களைச் செய்து நிர்ணயிக்க வேண்டியிருக்கிறது. கணக்குகளும் அனுமானங்களும் சரியாவென்று தீர்மானம் செய்யக்கூடியவர் மிகவும் சொற்பமாக இருக்கின்றனர். சாதாரண மனிதனைப் பொறுத்தவரையில், நியூடன் நிர்த்தாரணம் செய்த ஆகர்ஷண சக்தி தத்துவங்களைப் (Laws of Gravity) புறக்கணித்துவிட்டு ஈன்ஸ்டின் தேசகால ஸமுச்ய சம்பந்த தத்துவங்களை ஸ்தாபித்திருக்கிறார் என்று கேட்கும்பொழுது பிரமித்து நமஸ்காரம் செய்வதைத்தவிர வேறொன்றும் செய்வதற்கில்லை.

ஒரே விதமான பல பிரத்தியக்ஷ அனுபவங்களிலிருந்து ஒரு பொது விதியை நிர்ணயித்து அதன் மூலம் இனி நடக்கப்போகும் சம்பவங்களை நிச்சயம் செய்வதற்கு அனுமானம் என்று பெயர். சூரியன் தினமும் காலையில் உதித்து மாலையில் அஸ்தமிக்கிறான். விலக்கின்றி இது எப்பொழுதும் பிரத்தியக்ஷ அனுபவமாயிருப்பதால் காலையில் உதிப்பதும், மாலையில் மறைவதும் சூரியன் சுபாவம் என்று தீர்மானிக்கிறோம். சகத்திலுள்ள பொருள்களின் சுபாவங்களையும், பரஸ்பர சம்பந்தங்களையும், ஒன்றோடொன்று பிணைத்து அவைகளை நமக்கு வேண்டிய பலனளிக்குமாறு செய்யக்கூடிய முறைகளையும், கருவிகளையும் கண்டுபிடிப்பதே ஆராய்ச்சிகளின் முயற்சியாகும். ஆதலால் பிரத்தியக்ஷத்தை அடிப்படையாகக் கொண்ட அனுமானமே நமது மதியின் முக்கிய சாதனமென்று சொல்லத் தகும். இதற்கு விரோதமான எதையும் பொய்யென்று சொல்லுகிறோம். இதற்கு ஒத்திருப்பதை சத்தியம் என்று நம்புகிறோம்.

அனுமானம் பிரத்தியக்ஷ அனுபவத்தை அடிப்படையாகக் கொண்டிருந்தபோதிலும், சிலவேளை இரண்டிற்கும் முரண்பாடு இருப்பதுபோலத் தோன்றலாம். பூமியைச் சூரியன் சுற்றுவது பிரத்தியக்ஷமாகத் தோன்றுகிறது. ஆனால் நாம் ரயிலில் போகும்பொழுது மரங்கள் ஓடுவதுபோல் காணப்படுவதை நினைத்துக் கொண்டால், பூமி சூரியனைச் சுற்றினாலும் நம் கண்களுக்குச் சூரியன் சுற்றுவதுபோலத் தோன்றக்கூடுமென்று சமாதானம் செய்துகொண்டு இதர அனுபவங்களைக் கொண்டு பூமிதான் சுற்றுகிறதென்ற முடிவுக்கு வருகிறோம்.

ஆதலால், பிரத்தியக்ஷத்திலிருந்து அனுமானம் செய்வது சுலபமான காரியமல்ல. இப்பொழுது நமக்கு உண்மையென்று புலப்

படும் அனுமானத்திலும் தவறு இருக்கலாம் என்பதை எப்பொழுதும் மறக்கக்கூடாது. நமது சொந்த அனுபவங்களைப்பற்றியே இவ்வாறு ஜாக்கிரதையாக இருக்கவேண்டி யிருக்க பிரத்தியக்ஷமல்லாத பொருள்களைப்பற்றிப் பிடிவாதம் செய்வது எவ்வளவு அநியாயமாகும்?

நமது அனுபவத்திற்கு அப்பாலுள்ள பொருள்களைப்பற்றிச் சிந்திக்காமலிருந்து விடுவதே நலமென்று நினைக்கக்கூடும். ஆனால் இது சாத்தியமில்லை. இந்த விசித்திர உலகத்தின் சூக்ஷ்மம் என்ன? நமது வாழ்க்கையின் லக்ஷியம் எது? சமூக வாழ்க்கையின் தத்துவங்கள் யாவை? இந்தக் கேள்விகளுக்குப் பிரத்தியக்ஷத்தையும் அனுமானத்தையும் கொண்டு பதில் கூற முடியாது. ஒவ்வோர் சமூகமும் தன் பெரியார்களின் உபதேசங்களையே பரமார்த்தமாகக் கொண்டு வாழவேண்டியிருக்கிறது. இதைத் தான் சாஸ்திரப் பிரமாணம் என்றும், மதமென்றும் கூறுவார்கள். முன் காலத்தில் பலவித சமூகங்களுக்கும் இடையே போக்கு வரத்தும் கல்வியும் குறைவாகவிருந்ததால், ஒவ்வொரு மதத்தினரும் தம் மதத்தின் உபதேசங்களைத் தெய்வ வாக்காகக் கருதிவந்தார்கள். அந்தச் சம்பிரதாயத்தைக் கொண்டே இன்றும் பல சமயத்தார்கள் பிற மதங்கள் பொய்யென்றும் தம் மதம் மட்டுமே உண்மையைப் போதிக்கிறதாகவும் நம்புகிறார்கள்.

இதைக் கண்டு எல்லா மதங்களும் புரட்டுகள் என்றும் பிரசாரம் செய்கிறார்கள். ஆனால் நிச்சயமான அனுமானத்திற்கு இடமில்லாமலே வாழ்விற்கு அவசியமாயுள்ள பிரச்னைகளைப்பற்றி பல அபிப்பிராயங்கள் இருப்பது சகஜமென்றும், அவைகளைப் பிறர் மனத்தில் பலாத்காரமாகப் புகுத்துவதுதான் அநியாயம் என்று உணர்த்துவதே உண்மை அறிவின் அறிகுறியாகும்.

### மதிமயக்கத்தின் காரணங்கள்

நாம் மதி மயங்குவதற்குப் பல காரணங்கள் உள. அவைகளில் முக்கியமானவை (1) அறியாமை, (2) பிடிவாதம், (3) பயம், (4) சுயநலம்.

நம் இந்திரியங்களின் அற்ப சக்திகளையும், ஜகத்தின் அளவற்ற விசித்திரத்தையும் நினைக்கும்பொழுது நமது அறியாமையைப்பற்றி ஆச்சரியப்படவேண்டியதில்லை. சிறிதளவேனும் அறிவதற்கு நமக்குச் சக்தியிருப்பதைக் கண்டுதான் வியப்படைய வேண்டும் (?). ஆயினும் நமக்குச் சிறிதளவுதான் தெரியும், அதிலும் அரைகுறையாகத் தெரியும் என்பதை மறந்துவிடுகிறோம்.

அறியாமையைக் காட்டிலும் பிடிவாதமே பொய்க்கு முக்கிய இருப்பிடம். உறங்குகிறவனை எழுப்பிவிடலாம். வேண்டுமென்று தூங்குவதுபோல் பாசாங்கு செய்பவனை எழுப்புவது சாத்தியமன்று. அவ்வாறே மூடக் கொள்கைகளைப் பிடிவாதமாகப் பிடித்துக்கொண்டு அவைகளே பரமார்த்த சித்தாந்தமென்று வாதாடுபவனைத் தர்க்கத்தால் திருப்ப முயல்வது வீண். நமது அறிவுக்கெட்டாமல் ஒரு பொருள் எவ்வளவு தூரத்தில் இருக்கின்றதோ அதே அளவில் பிடிவாதமும் வலுக்கின்றது. அதைக் கண்டு சாதுக்கள் உண்மையில்லாமல் இவ்வளவு பிடிவாதமாக

நம்பிக்கையுண்டாகுமா? (கொள்ள முடியுமா) என்று தாமும் மயங்குகின்றனர். வெகுகாலம் நம்பியிருந்த கொள்கைகளும், அனுஷ்டித்த பழக்க வழக்கங்களும் தவறு என்று ஒப்புக்கொண்டால் பெரிய அனர்த்தமுண்டாகும் என்பது உண்மை. 'அறியாதவர்களுக்கு மனக்குழப்பம் உண்டாகலாகாது' என்று கீதையில் சொல்லப்படுகிறது. தவிரவும் அவ்வாறு மனக் குழப்பம் உண்டாக்குவதில் தீவிர சிரத்தையுள்ளவர்கள் சாதாரணமாக ஒரு மூடக் கொள்கைக்குப் பதிலாக மற்றோர் மூடக் கொள்கையை பிரசாரம் செய்யவேண்டுமென்ற பிடிவாதக்காரர்களாக இருக்கின்றனர். அவர்களிடம் பயப்படுவது ஓரளவு நியாயமாகும்.

தனி மனிதனுக்குத் தோன்றிய உண்மைகளைக் கடைப்பிடிப்பதால் பெரிய கஷ்ட நஷ்டங்கள் உண்டாகலாம். இதனால் மனச்சாட்சியை அடக்கிச் சுயநலத்தைக் கோருவது சகஜ மனித தர்மமாக விருக்கிறது. அப்படிச் செய்வதால் தனது நிலையிலிருந்து கீழே வீழ்வதாக உணர்ந்து தனக்குள்ளேயே வெட்கப்படுவதும் சகஜம். இந்த முரண்பாட்டைத் தீர்க்க, தன் சுயநலத்திற்கு ஒத்தவாறு தர்மத்தையும் சத்தியத்தையும் திருத்தியமைத்துக் கொள்ளும் பழக்கம் ஏற்படுகிறது.

இந்த நான்கு காரணங்களாலும் நமது தினசரி வாழ்க்கை எவ்வாறு பாதிக்கப்படுகின்றது என்பதை ஆராய்வது இந்நூலின் நோக்கம். ஜகத்தைப்பற்றியும், மனித சொரூபத்தைப்பற்றியும் பெரிய சிக்கலான பிரச்னைகள் இருக்கின்றன. அவ்வாறே அறிஞர்களுக்குள்ளும் தீவிர அபிப்பிராயபேதத்தினால் ஏற்படும் பல தர்ம சங்கடங்கள் இருக்கின்றன. அவைகளைப் பற்றிய வாதங்கள் இந்நூலில் விசாரிக்கப்படவில்லை. சாதாரண மனிதர் தம் பகுத்தறிவைச் சிறிது உபயோகப்படுத்தப் பழகிக்கொண்டால் எந்தெந்தக் குறைகளிலிருந்து தப்பித்துக்கொள்ள முடியுமோ, எவ்வித ஏமாற்றங்களினால் ஏமாறுமல் (?) இருக்க முடியுமோ அவைகளை விளக்க முயற்சி செய்யப்பட்டிருக்கின்றது.

உண்மை அறிவும், தர்ம சிந்தனையும் உத்தம புருஷார்த்தங்களென்று, இதுகாறும் தோன்றிய பெரியார்களெல்லாம் உபதேசித்திருக்கின்றனர். இந்தத் தத்துவத்தை வாதத்தால் ஸ்தாபிக்க முடியாது. ஒவ்வொருவரும் தன் உள்ளத்தில் ஆழ்ந்து ஆராய்ந்தால், இதை ஒப்புக்கொண்டாலொழிய மனிதப் பிறவிக்குப் பலனில்லை என்று தோன்றும். ஆயினும் தனது சுக துக்கங்களையும், லாப நஷ்டங்களையும் சிறிதும் பொருட்படுத்தாமல் சத்தியத்தையும், தர்மத்தையும் தேடுவோர், கோடியில் ஒருவர்கூட இருப்பது துர்லபம். மற்றவர்கள் தெரிந்தும் தெரியாமலும் பொய்யை மெய்யாகக் கொண்டு, அதர்மத்தை தர்மமாகக் கொண்டு வாழ வேண்டியிருக்கிறது. நாளுக்கு நாள் அறிவிலும் தர்மத்திலும் சிறிது வளர்ந்து வருவதே அவர்களுடைய லக்ஷியமாகக் கூடுமானல் அதுவே பெரிய காரியம். இந்த லக்ஷியத்தைத் தமிழ் நாட்டாருக்கு வற்புறுத்த வேண்டுமென்பது இச்சிறு புத்தகத்தின் பெரிய நோக்கமாகும்.

## மதம்

சமூக வாழ்க்கையில் பொய்யும் மெய்யும் எத்துறையில் அதிகமாகக் கலந்திருக்கின்றன வென்றால் 'மதம்' என்று நிச்சயமாகக்

கூறிவிடலாம். பொதுவாக மதத்தைப்பற்றியும், பிரத்தியேகமாக ஒருதனி மதத்தைப் பற்றியும் நடுநிலைமை வகித்துச் சிந்திப்பது மிகவும் கடினமான காரியம். இதற்கு முக்கிய காரணம் மத குருக்கள் எல்லோரும் மிகவும் பெரிய மனிதர்களாக இருந்திருப்பதே. அவர்கள் சுயநல மற்றவர்கள், சாமர்த்தியசாலிகள், பிற மனிதர்களை வசீகரம் செய்வதில் சக்தி வாய்ந்தவர்கள். மனித அறிவுக்கெட்டாத விஷயங்களைப்பற்றி தெளிவாக உபதேசித்தவர்கள். பரம்பரையாக பக்தர்கள் மனதில் வளர்ந்து தெய்வத்தன்மை அடைந்து விட்டவர்கள். அவர்கள் கூறுவதில் தவறு இருக்குமா?

ஒரு ஹிந்துவைக் கேட்டால் 'வேதங்கள் அனாதிப் பிரம்மத்தின் முகத்திலிருந்து வெளித் தோன்றியவை, அவைகளில் ஒவ்வொரு வார்த்தையும் உண்மையென்று கொள்ளவேண்டும், அதற்கு மாறாக நினைப்பது பாவம்' என்று சொல்லுவான்.

அம்மாதிரியே ஒரு முஸ்லிம் 'மகம்மதுநபி அவர்கள் தேவதூதர், அவர் கூறிய குரான் தேவவாக்கு' என்றும் கூறுவான்.

ஒரு கிறிஸ்தவன் 'ஏசுநாதர் நேரில் கடவுளின் மகன். பலவித அமானுஷ காரியங்கள் செய்தார். அவரைப் பின்பற்றாதவர்களுக்கு நற்கதி கிடையாது' என்று கூறுவான்.

தெய்வத்தைப் பற்றி ஒன்றும் தெரியாது என்று உபதேசித்த புத்தரையும் ஒரு தெய்வமாகச் செய்துவிட்டார்கள்.

இதைக் கண்ட நாஸ்திகர்கள் கோபித்து எல்லா மதங்களும் பொய்யும் புரட்டுமென்று கண்டிக்கிறார்கள்.

இவற்றில் எது உண்மை, எது தவறு என்று நிர்ணயிப்பது சுலபமல்ல. முடிவான தீர்ப்புக்கு வருவது சாத்தியமல்ல. மதங்களைப் பற்றி எவ்வித மனோநிலையில் சிந்திக்கவேண்டும் என்பதை பற்றி மட்டும் இங்கு ஆலோசிப்போம்.

வேதங்களைப் பிறப்பித்த ரிஷிகளும், புத்தரும், கிறிஸ்துவும், முகம்மதுநபி அவர்களும், ஜனங்களை ஏமாற்ற விரும்பினார்கள் என்று எண்ணுவது சுத்தப் பிசகாகும். தங்கள் தங்கள் சமூகங்களின் நன்மையைக் கோரி அதற்காகச் சொந்த சுகங்களையெல்லாம் தியாகம் செய்த உத்தமர்கள் என்பதை மனப்பூர்வமாக ஒப்புக் கொள்ளவேண்டும்.

ஆனால், எந்த மனிதனும் சர்வ ஞானமுடையவன் அல்ல. தான் பிறந்த சமூகத்தின் அறிவையும், பழக்க வழக்கங்களையும் முற்றிலும் தாண்டிச் செல்லமுடியாது. மற்றவர்களைவிட சில விஷயங்களில் விசேஷ அறிவாளிகளாக இருக்கக்கூடும். தாம் கண்ட தர்மத்தைச் சீர்திருத்தப் பாடுபட்டனர். அவர்கள் மனித வர்க்கத்தைச் சேர்ந்தவரல்லவென்றும், விசேஷ தெய்வப் பிரகிருதிகள் என்றும் நம்புவதால் பெரிய அனர்த்தம் உண்டாகிறது. அவர்களுடைய உபதேசங்களில் குற்றம் குறைகள் இருக்க முடியாது என்று நம்புவதால், காலதேச வர்த்தமானத்தை அனுசரித்து மாற்ற வேண்டுமென்று சொல்வதற்கு அவகாசமில்லாமல் போய் விடுகிறது.

ஆதிமுதல் மனிதன் தெய்வத்தைப் பற்றிச் சிந்தனை செய்திருக்கிறான். இதோடு திருப்தியடையாமல் இன்னும் நெருங்கிய வழிகளில் அதை அணுக விரும்பியிருக்கிறான். இந்த விருப்பத்தை வைத்துக்கொண்டு பலர் நேரில் கடவுளைக் கண்டுவிட்டதாகப் புராணங்களும், சம்பிரதாயங்களும் கூறுகின்றன. யோக சமாதியில் மனிதன் கடவுளை நூதன வழியில் தரிசனம் செய்கிறான் என்று இந்து சாத்திரங்கள் கூறுகின்றன. இதில் எவ்வளவு உண்மையுள்ள தென்பதைப்பற்றி ஆராய்வதற்கு வழியில்லை. சாதாரண மனித முயற்சியாலும் இந்திரியங்களாலும் இது அசாத்தியமென்பதைப் பற்றிச் சந்தேகமில்லை. நமது மொழிகளும், எண்ணங்களும் சமாதி நிலையடைவதற்கோ பிறருக்கு எடுத்து உரைக்கவோ சக்தியுள்ள கருவிகள் இல்லை. சில யோகிகள் தமது அனுபவத்தைக் கூற முயன்றாலும் அவர்களுடைய சொற்களால் குழப்பத்தைத் தவிர ஞானம் உண்டாகாதென்பதிலும் ஐயமில்லை. அந்நிலையில் நம்பிக்கையுள்ளவர்கள் அவற்றைப் பிரயத்தனம் செய்யவேண்டுமேயொழிய அதைப் பற்றிப் பிறரிடம் வாதிப்பதும் பிரசாரம் செய்வதும் குருடனுக்குக் குருடன் வழிகாட்டுவது போலாகும். அதனால் எவ்வித நன்மையுமுண்டாகாது.

ஏதோ ஒருவிதத்தில் தெய்வத்தைத் தரிசிப்பதுசாத்தியமென்று வைத்துக் கொண்டாலும் அதனால் மற்ற சாமர்த்தியங்களெல்லாம் வந்துவிடுமென்று எண்ணுவதற்கு ஆதாரம் இல்லை. இந்த உலகத்தின் நியமங்களை யாராலும் தவிர்க்கமுடியாது. கணித சாத்திரத்தில் கரை தேர்ந்தவன் ஒரு சைகிள் விட சாமர்த்தியமில்லாமலிருக்கலாம். ஆதலால் சாதாரண மனிதர்களுக்குக் கிட்டாத அனுபவத்தை ஒரு சிலர் அடைந்துவிட்டதனாலேயே உலக தர்மங்களில் அவர்கள் நிபுணர்கள் ஆக வேண்டியதில்லை.

பக்தியின்மிகுதியால் கனவையும், கற்பனையையும் நடந்தேறிய சம்பவமாகக் கருதுவது சகஜம். சமீபத்தில் பண்டித ஜவஹர்லால் நேரு, ஹிட்லர் அழைப்பை மறுத்துவிட்டாரென்று ஒருவர் கதை கட்டிவிட்டார். வேண்டுமென்று பொய் சொல்லவில்லை. ஜெர்மனிக்கு வந்தால் அவருக்கு வேண்டிய சௌகரியங்கள் செய்யப்படும் என்று ஜெர்மன் அரசாங்க உத்தியோகஸ்தர்கள் தெரிவித்ததிலிருந்து இந்தக் கதை உற்பத்தியாயிற்று. காந்தியடிகளைப் பற்றி அவ்வப்பொழுது பலகட்டுக் கதைகள் தோன்றி அதை அவர் மறுத்திருப்பது எல்லோருக்கும் தெரியும். தந்தியும், தபாலும், ரேடியோவும், பத்திரிகைகளும் மலிந்திருக்கும் இந்நாட்களிலேயே இவ்விதக் கதைகள் சாத்தியமானால், எல்லா சாஸ்திரங்களும், சரித்திரங்களும், ஏட்டுச் சுவடிகள் வழியாகவும், வாய் மூலமாகவும் காப்பாற்றப்பட வேண்டியிருந்த காலங்களில் பெரியோர்களைப் பற்றி பல கதைகள் ஏற்பட்டிருப்பதில் ஆச்சரியம் ஒன்றுமில்லை.

எல்லா மதங்களும் நான்கு கேள்விகளுக்குப் பதில் கூற முயலுகின்றன: (1) இந்த ஜகத்திற்குக் காரணப் பொருள்கள் என்ன? (2) மனிதனுடைய உண்மை சொரூபம் என்ன? (3) இறந்த பிறகு மனிதனுக்கு வேறு வாழ்வு உண்டா? (4) இந்த வாழ்க்கையில் அனுசரிக்க வேண்டிய தர்மம் என்ன?

இந்தக் கேள்விகளில் ஒன்றுகூட நமது பிரத்தியக்ஷ அனுபவத்தாலும், அனுமானத்தாலும் நிர்ணயிக்கக் கூடியதன்று. அவற்றிற்கு யார் எதைக் கூறினாலும் அவை முற்றிலும் சரி அல்லது தவறு என்று சொல்வது சாத்தியமில்லை. ஆதலால் சாதாரண ஜனங்கள் தம் முன்னோர்களின் நம்பிக்கைகளையே தாமும் கொள்வது நியாயம் என்று நினைப்பது சகஜம்.

முதல் மூன்று கேள்விகளுக்கும் எல்லா மதங்களும் ஏறக்குறைய ஒரேவிதமாக பதில் சொல்லுகின்றன. இந்த உலகிற்குக் காரணம் கடவுள். ஒவ்வோர் மனிதனுக்கும் நித்தியமான ஆத்மா ஒன்றுண்டு. இறந்த பிறகு இவ்வாழ்வில் செய்த தர்மத்திற்கு அனுகுணமாக நற்கதியையும் துர்க்கதியையும் அடைகிறான்.

முக்கிய கொள்கைகளில் ஒன்றுபட்ட போதிலும் கடவுள், ஆத்மா இவ்விரண்டின் சொரூபத்தைப் பற்றியும் மதங்களுக்குள்ளும், ஒவ்வோர் மதத்திலும் பல கிளை மதங்களுக்குள்ளும் பல பேதங்கள் இருக்கின்றன. அடிக்கடி உபநிஷத்துகளில் இந்த சொரூபங்கள் நமது மனத்திற் கெட்டாதவை என்று கூறப்பட்டிருக்கிறது. ஆயினும், அவைகளைப் பற்றி எவ்வளவு வித்தியாசங்களும், கக்ஷிகளும் ஏற்பட்டிருக்கின்றன! உபமானங்களாலும் கற்பனைகளாலும் கடவுளின் மகிமையையும் ஆத்மாவின் சோதியையும் வர்ணிப்பதில் குற்றமில்லை. ஆனால் இவைகளெல்லாம் கவிதைகள் இல்லை என்று சண்டை போடுவது மதியீனமல்லவா?

கடவுளையும் ஆத்மாவையும் பற்றி ஓரளவு கற்பனை செய்யக் கூடும். ஆனால் இறந்த பிறகு நம் கதி என்னவாகும் என்பதைப் பற்றிக் கற்பனை செய்வது கூடக் கஷ்டமாக இருக்கிறது. ஆனால் நாம் அடியோடு நசித்துவிடுவோம் என்ற எண்ணமும் சகிக்கத் தகுந்ததல்ல. (ஏன்?)

எல்லா மதங்களும் நம் ஆத்மா சாகாதென்றும் இந்த வாழ்க்கை மாதிரி நமக்கு மற்றோர் வாழ்க்கை கிடைக்குமென்றும் கூறியிருக்கின்றன. கிறிஸ்தவ, இஸ்லாம் மதங்கள் மனிதனுக்கு இது ஒரே ஜன்மம் தானென்றும் இதில் நன்மை செய்தால் சாசுவத மோக்ஷமும், தீமை செய்தால் நித்திய நரகமும் கிடைக்குமென்று கூறுகின்றன. இந்தியாவில் தோன்றிய மதங்களோ ஒரு சிறிய வாழ்க்கைக்குள் இவ்வளவு மகத்தான விஷயம் தீர்மானமாய்விட முடியாதென்றும் ஆத்மா அநேக ஜன்மங்கள் எடுத்துப் பல கர்மங்கள் செய்து, அவற்றின் பலா பலன்களை அனுபவித்து முடிவில் முக்தியடைகிறதென்று கூறுகின்றன. இந்த உபதேசத்திற்கு ஆதாரமாக முன் ஜன்மங்கள் சிலருக்கு ஞாபகம் வருவதாகவும் கூறுகின்றன. ஆனால் கடவுள் தரிசனத்தைப் பற்றிய கதைகள் போல், இவைகளும் பெரும்பாலும் கனவாகவும், கற்பனையாகவும் இருக்கும். சில வேளை இம்மாதிரியான அதிசயக் கதைகளைக் கொண்டு அறியாதவர்களை ஏமாற்றிப் பிழைப்பதும் உண்டு.

மதங்களின் முக்கிய உபயோகம் தர்மம். தர்மத்தைப் போதிப்பதற்காகவே இதர தத்துவங்கள் கற்பிக்கப்படுகின்றன. மற்ற தத்துவங்களைப் பற்றி அபிப்பிராய பேதங்கள் இருப்பதால் அதிக மனஸ்தாபங்களும், சண்டைகளும் ஏற்படாது. ஆனால் தர்மத்தில் வித்தியாசங்கள் ஏற்படவே ஒவ்வொரு சாராரும் தமது பழக்க

வழக்கங்களை மேன்மையென்றும் மற்றவர்கள் தீய பழக்கங்களை அனுசரித்து நரகமடையப் போகிறார்களென்றும் நினைக்கிறோம்.

பண்டைக்காலங்களில் வாழ்க்கையின் எல்லாத்துறைகளிலும் மதத்தின் பெயரால் நியமங்கள் ஏற்படுத்தப்பட்டன. ஆசாரம், விவாகம், சொத்துப்பிரிவினை, ஜாதி வித்தியாசங்கள் இவைக ளனைத்தும் மதவிவகாரங்களாகக் கருதப்பட்டன. காலதேச வர்த்த மானத்தை அனுசரித்து இவைகள் மாறினால் மதகுருக்கள் பழைய கிரந்தங்களுக்கு விசேஷ வியாக்கினங்கள் செய்து புதிய வழக்கங் களுக்கும் அவைகளில் இடம் கண்டுபிடித்து வந்தனர். இது கூட இந்நாட்களில் சாத்தியமில்லை. ஆதலால் தர்மத்தை நித்திய தர்ம மென்றும் காலதர்மமென்றும் வகுத்து நித்திய தர்மத்திற்கே மதங் கள் பிரமாணங்களென்று கூறுவது வழக்கமாகின்றது. சத்திய மும், அன்பும், அஹிம்சையும், இந்திரிய நிக்கிரகமும் எல்லா மதங் களிலும் உபதேசிக்கப்படுவதால் அவற்றை எல்லோரும் ஏற்றுக் கொண்டு மற்ற லௌகீக தர்மங்களை அவ்வப்பொழுது மாற்றிக் கொள்ள சமூகத்திற்குச் சுதந்திரமுண்டு என்ற கொள்கை மதப் பற்றுள்ளவர்களிடம் பரவிவருகின்றது.

தர்மத்திற்கு ஏன் மதத்தில் ஆதாரம் தேடவேண்டும்? மனித அறிவைக்கொண்டே நிர்ணயம் செய்யக்கூடாதா என்று கேட் கலாம். இவ்வாறு செய்ய எல்லாக் காலங்களிலும் எல்லா நாடுகளி லும் தீவிர முயற்சி செய்திருக்கின்றனர். சுகத்தைச் சிலர் லக்ஷிய மாகக்கொண்டு தர்மத்தை நிச்சயிக்கப் பிரயத்தனம் செய்திருக் கின்றனர். சக்தி, சமூக நன்மை, மனிதவர்க்கத்தின் மேன்மை முதலிய லக்ஷியங்களையும் கொண்டு நிர்ணயிக்க முயற்சி செய்திருக் கின்றனர். ஆனால் எல்லோரும் ஒப்புக்கொள்ளக்கூடிய தர்மத்தை இதுவரையில் நிர்ணயிக்கமுடியவில்லை. பிறருக்காக ஒருவன் ஏன் கஷ்டப்படவேண்டும்? சமூகத்திற்காக ஏன் பாடுபடவேண்டும்? சுகம் எதில் இருக்கிறது? சாவு நிச்சயமாக இருக்கும்பொழுது அல்ப சுகத்தால் என்ன பிரயோசனம்? இம்மாதிரியான பல சிக்க லான பிரச்னைகளுக்கு நமது பகுத்தறிவு எவ்வித முடிவான பதிலுமுரைக்க சக்தி பெறவில்லை.

தவிரவும் தர்மத்தின் முக்கிய அம்சம் நியமங்களை விதிப்பது மட்டும் அல்ல. அந்த நியமங்களை அனுஷ்டிக்கும் சக்தி யளிப்பதும் அவசியம், அதுதான் மிகவும் சிரம சாத்தியமான காரியம். நமது காமங்களையும் குரோதங்களையும் கட்டுப்படுத்துவதற்கு அறிவு போதாது. தர்மத்தில் அதிகப்பற்று வேண்டும். மதங்கள் மூலம் தான் இப்பற்று போதிய அளவில் ஏற்பட்டிருக்கின்றது.

தேசவிடுதலை, புதிய சமூக நிர்மாணம், முதலிய லக்ஷியங்க ளுக்காகவும் மனிதர் பெரிய தியாகங்களைச்செய்ய முன்வருவது உண்மை. ஆயினும், இந்த உற்சாகங்கள் நிலைத்திரா. வாழ்க்கை யின் லக்ஷியங்களைப் பற்றியும் அதற்கு மூல காரணமான தெய்வம், ஆத்மா முதலியவற்றைப் பற்றியும் உள்ள கொள்கைகளில் நம்பிக் கையும் ஸ்திரமாக ஏற்பட்ட பிறகே நம் மனம் தின சஞ்சலத்தை ஜயித்து ஸ்திரமான அறவழியில் செல்ல ஆற்றல் பெறுகின்றது. இந்தக் கொள்கைகளை அனுமானத்தால் நிரூபிக்கவும் முடியாது, நிர்மாணிக்கவும் முடியாது. அவ்வப்போது தோன்றும் பெரியார்

களின் போதனு சக்தியால் இக்கொள்கைகளின் பேரில் நம்பிக்கை ஏற்படுகிறது.

ஆதலால் எந்த மதத்தையும் மரியாதையுடன் ஆராய்வது அறிஞனுக்கு அழகு. ஆனல் தன்னைப்போன்ற மனிதர்களால் தான் அவைகள் ஸ்தாபிக்கப்பட்டு வளர்க்கப்பட்டன வென்பதையும் மறந்துவிடக்கூடாது. இதை மறந்து தம் மதம் மட்டும் தெய்வத்தால் பிறப்பிக்கப்பட்டது என்று பிடிவாதம் செய்து பிறரைத் துன்புறுத்துவோர் மூடர்களில் மகா மூடர்கள் என்று தீர்மானித்து விடலாம்.

எந்த மதக்கொள்கையும் பரமார்த்தத்தைப் பற்றிய ஊகமே. அது மனிதன் விருப்பத்தினுலும், அவனது அந்தராத்மாவின் தேவையினுலும் தோன்றியது. ஆதலால் அதில் ஓரளவு உண்மையிருக்கலாம் என்பதே மதத்திலுள்ள மெய்யாகும். இக்கொள்கைகளைத் தெய்வமே நேரில் தெரிவித்தது; ஆதலால் அதை நம்பித்தான் ஆகவேண்டும், நம்பாதவர்கள் நரகத்திற்குப் போவார்கள் என்பது முற்றிலும் பொய்.

## அத்தியாயம் 2

### குடும்பம்

மதமும், குடும்பமும் பழைய தாயாதிகள். வெளியிலிருந்து பார்க்கும்பொழுது இரண்டிற்கும் நெருங்கிய நேசபாவம் இருப்பதுபோல் தோன்றும். ஆனல் உட்புகுந்து பார்க்கின் தீராப் பகை. குடும்பம் இவ்வுலக சுகத்திற்கு உபாயம். மதமோ மறுமை சுகத்திற்காக இம்மை சுகத்தைத் தியாகம் செய்ய வேண்டுமென்கிறது. பல மதங்களில் வீட்டைத் துறந்து சந்நியாசம் எடுத்துக்கொள்வோர்களே மத குருக்களாக முடியும். ‘இந்த வாழ்க்கை அநித்தியம், அதன் பற்றை அறுத்துவிடு’ என்று கூறுகின்றன மதங்கள். ‘இன்றைய வாழ்வுதான் நிச்சயம். வீட்டுக்காரியத்தைப் பார்’ என்று சொல்லுகிறது குடும்பம்.

பெரும்பாலான மனிதர்களுக்கோ கூழுக்கும் ஆசை, மீசைக்கும் ஆசை. குடும்பம், மதம் இரண்டிற்கும் நடுவில் எப்படியோ சமாளித்துக்கொண்டு காலம் தள்ளுகிருர்கள். குடும்ப வாழ்க்கை சாரமற்று இருப்பின் மதத்தில் சரண் புகுகின்றனர். மதக்கோட்பாடுகளை அனுசரிக்க விருப்ப மில்லாவிடின் குடும்பத்தின் பேரில் குற்றம் சாட்டிவருகின்றனர்.

பசி, காமம், அன்பு, அகம்பாவம் என்ற நான்கு தூண்களின் பேரில் குடும்பம் கட்டப்பட்டிருக்கிறது. இவற்றில் ஒரு தூண் ஆடினுலும் குடும்பம் கலைய ஆரம்பிக்கும். ஐரோப்பாவில் பல நகரங்களில் வீட்டில் சமையல் இல்லாமல் ஓட்டலில் சாப்பிட்டுக்கொண்டு தம்பதிகள் குடித்தனம் செய்யப் பிரயத்தனம் செய்கிருர்கள். அநேகமாக அது விவாக ரத்தில் கொண்டுபோய்விடுகிறது.

காமத்திற்கும் குடும்பத்திற்கும் சம்பந்தமிருக்கவேண்டிய தில்லை. தங்கள் காமங்களை வேறு விதங்களில் பூர்த்தி செய்து கொண்டு புருஷனும், மனைவியும், வாழ்க்கைத்துணைவர்களாக

இருக்கவேண்டுமென்று மேனாட்டு மேதாவிகள் உபதேசித்து வருகின்றனர். ஆனால், இந்தத் தோழமையைப் பலர் விரும்புவதாகத் தெரியவில்லை.

குழந்தைகளில்லாமல் காமத்தைப் பரிபூர்ணமாக அனுபவிக்க வேண்டுமென்று பலர் விரும்பியதன் பலனாக மேனாட்டு சமூகங்களே க்ஷீணிக்கவாரம்பித்து, ஹிட்லர்களும் முசோலினிகளும் கட்டாயமாகக் கலியாணம் செய்து குழந்தை பெறுவோருக்குப் பரிசு கொடுக்க ஆரம்பித்திருக்கின்றனர்.

ஆதலால் குடும்பத்தின் சொரூபத்தை மாற்றுவது எளிதான காரியமல்ல. அதன் ஒவ்வோர் அமிசத்திலும் பலவித சங்கடங்களும், சிக்கல்களும் இருக்கின்றன. இவற்றை எல்லாம் சாமர்த்தியமாகச் சமாளித்து வாழ்க்கையறம் குன்றாமலும், இன்பம் கூடியும் நடத்துவோனை மிகவும் கெட்டிக்காரன் என்று சொல்லவேண்டும்.

மனித சுபாவத்தின் அடிப்படையான நான்கு வளர்ச்சிகளின் பேரில் குடும்பம் அமைக்கப்பட்டிருக்கிறதென்று மேலே கூறப்பட்டது. பசியைப் போக்குவதற்கு வருமானம், காமத்தைத் தீர்ப்பதற்கு விவாகம், அன்பை வளர்ப்பதற்குக் குழந்தைகள், அகம்பாவத்தைப் பெருக்குவதற்கு பந்துக்கள் என ஒவ்வோர் மனோபாவமும் உருவெடுத்துக் குடும்பத்தைக் காக்கின்றது. இந்த அம்சங்களைத் தனித்தனியாக ஆராய்வது அவசியமாகும்.

### வருமானம்

தனி வருமானம், தனிக்குடித்தனம், தனிச்சமையல் இம் மூன்றும் குடும்பத்திற்கு அடிப்படையானது. இவற்றிற்குள் வருமானம் மற்ற இரண்டிற்கும் ஆதாரமானது. இவ்வருமானம் பல வழிகளில் கிடைக்கலாம். சொத்திலிருந்து வரலாம். வேலையின் கூலியாகக் கிடைக்கலாம். ஒரு குடும்பத்தில் பலர் சம்பாதிக்கலாம். அல்லது சிலர் சம்பாதித்துப் பலர் சாப்பிடலாம்.

பண்டைச் சமூகங்களில் தகப்பன், தாய் உயிருடனிருக்கும் பொழுது பிள்ளைகளும், பேரப்பிள்ளைகளும் சேர்ந்திருப்பது வழக்கம். தகப்பன், தாய் இருவரும் இறந்த பிறகே சகோதரர்கள் பிரிந்து போவார்கள். சில வேளைகளில் அப்பொழுது கூடப் பிரியாமல் ஒன்றாயிருப்பதுமுண்டு. அவ்வாறு சேர்ந்திருப்பதில் பல சௌகரியங்களுண்டு. பல அசௌகரியங்களுமுண்டு. ஒருவர், இருவர் அதிர்ஷ்டசாலியாயிருந்து சம்பாதித்தால் மற்றவர்களும் சௌகரியப்படுகிறார்கள். எவ்வளவு பெரிய சம்பாத்தியமிருந்தாலும் பெரிய குடும்பத்தைச் சம்ரக்ஷணை செய்யும்பொழுது அதிக ஆடம்பரத்திற்கு இடம் கொடுப்பதில்லை - கஷ்டகாலங்களில் ஒருவருக்கொருவர் துணைபுரிகிறார்கள். ஆனால் இந்த ஏற்பாட்டினால் சோம்பேறிகளுக்குச் சௌகரியமுண்டாகிறது. ஏகாந்தமில்லாமல் வீட்டில் சண்டைகளும், மனஸ்தாபமும் உண்டாகின்றது.

பெரிய அவிபக்த குடும்பங்களை நிலைநிறுத்தி வைப்பதற்கும், அவைகளைப் பிரித்துவிடுவதற்கும் சொத்துரிமை ஏற்பாடுகளே முக்கிய கருவிகளாவன. மலையாளத்தில் பெரிய தாவாடுகளைப் பிரிக்கக்கூடாதென்று இருந்தவரையில் அவிபக்த குடும்பங்களே வழக்கமாக விருந்தன. ஆனால் பாகம் செய்துகொள்ள உரிமைகள்

ஆங்காங்கு வழங்கப்பட்டு அவைகள் சிதறுண்டுபோக ஆரம்பித்து விட்டன. தமிழ் நாட்டிலும், இதர மாகாணங்களிலும் மைனர்களுக்கு உரிமைகள் இருப்பதாலும், பாகம் செய்துகொள்ளுவதில் பல கஷ்டங்கள் உண்டாவதாலும், ஓரளவு அவிபக்த குடும்பங்கள் இன்னும் இருந்து வருகின்றன. ஆனால் விவாகமானதும் பிரிந்து தனிக்குடும்பம் ஏற்படுத்துவது சகஜமாக வருகின்றது.

இதுவரையில் சொத்துரிமைகளும், உத்தியோகமும் வருமானம் கொடுக்கக்கூடிய தொழில்களும் புருஷர்களைச் சேர்ந்திருக்கிறது. ஆதலால் மனைவியும் குழந்தைகளும் புருஷர்களுடைய வருமானத்தில் ஜீவனம் செய்துவருகிறார்கள். இவ்வேற்பாட்டால் அவனுடைய பொறுப்பு அதிகரிக்கிறது. அதிகாரமும் நிலைநிற்கிறது. தன் குடும்பத்திற்கு யதேச்சாதிகாரியாக இருக்கிறான். நல்லவனாகவிருந்தால் குடும்பம் சுகமாகவிருக்கும். கெட்டவனாகவிருந்தால் மனைவியையும், குழந்தைகளையும் கொடுமையாக நடத்தலாம். வீண்செலவு செய்துவிட்டு அவர்களைப் பட்டினிபோடலாம். இந்த எதேச்சாதிகாரத்தைத் தடுப்பதற்குப் பல சமூகங்களில் பலவிதமாக முயற்சி செய்திருக்கிறார்கள். பெண்களுக்கும், குழந்தைகளுக்கும் சொத்துரிமைகள் கொடுப்பதனால் ஓரளவு இதற்குப் பரிகாரம் ஏற்படும். இந்துக்களிடம் பிதுரார்ஜித சொத்தில் ஆண் குழந்தைகளுக்குப் பங்குண்டு. பெண்களுக்குச் சீதனம் முதலிய சில உரிமைகளுண்டு.

எந்தச் சமூகத்திலும் சொத்திலிருந்து அதிக வருமானம் பெறுவோர் சிறுபான்மையோராகவே இருப்பர். அன்றாடம் வேலை செய்து ஊதியம் பெறுவோர் பெரும்பாலோராவர். ஆதலால் புருஷனுடைய ஊதியத்தில் பிழைக்கும் குடும்பங்களில் அவன் வைத்தது தான் சட்டம். இதனால் பெரிய அநியாயம் ஏற்படுகிறதென்று கண்டு சிலர் பெண்களும் எல்லாத் தொழில்களிலும் சரி சமமாக வேலைசெய்து கூலிபெற வேண்டுமென்கிறார்கள். அப்படிச் செய்தால் வீட்டு வேலையை யார் பார்ப்பார்கள், குழந்தையை யார் கவனிப்பார்கள் என்கிற பிரச்னைகள் எழும்புகின்றன. இரண்டு பேரும் சம்பாதித்தாலும் குடும்பச் செலவிற்கு யார் எவ்வளவு கொடுப்பதென்று நியமம் செய்து, அதை அமுலுக்குக் கொண்டு வருவது சாத்தியமானதன்று. பல தொழிலாளிகள் தங்கள் மனைவிகள் சம்பாத்தியத்தால் குடும்பம் நடக்கட்டுமென்று விட்டுவிட்டு தங்கள் கூலிகளைக் குடித்தும், மற்ற தீயவழிகளிலும் வீணாக்கி விடுகிறார்கள்.

குடும்ப விவகாரங்களில் ராஜ்யமும், சட்டமும் தலையிடக் கூடாதென்ற கொள்கை நேற்றுவரையில் நடமாட்டத்தில் இருந்தது. மதம், வழக்கம், சம்பிரதாயம், சுயநலம், அன்பு எல்லாம் சேர்ந்து புருஷனை பொறுப்பாளியாகச் செய்து குடும்பத்தை ஒழுங்காகச் சவரணை செய்யச்சொல்லுமென்று நம்பினார்கள். குடும்பச் சண்டைகளைப் பற்றி வெளியில் பேசுவது வெட்கமென்ற வழக்கமிருந்து வந்தது. பெண்டாட்டி பட்டினி கிடந்தாலும், குழந்தைகள் நிர்வாணமாகத் திரிந்தாலும் அதைப் பார்க்காதது போல் போய்க்கொண் டிருந்தார்கள். ஆனால், ரயில்களும், கலாசாலைகளும், டாக்டர்களும், சமூக சாஸ்திர நிபுணர்களும் தலைப்படவே குடும்பங்களின் நிலைமையைப்பற்றி பரிசிலனை செய்ய

ஆரம்பித்தார்கள். எல்லா வருமானத்தையும் புருஷனிடம் கொடுத்துவிடுவதால், அவன் தன்னை ஒரு குட்டி அரசனைகப் பாவித்து மனைவி மக்களைத் தன் பணிவிடைக் கருவிகளாகச் செய்து வருகிறன் என்ற சந்தேகம் ஏற்பட்டது. உடனே ஸ்திரீகள் சுதந்திர இயக்கம் தோன்றிற்று. விவாக நியமங்களிலும், சொத்துரிமைகளிலும், தொழில் செய்வதிலும், ராஜீய சுதந்திரங்களிலும், ஆணும் பெண்ணும் சமானமாக இருக்கவேண்டுமென்று வாதித்தார்கள். இதைப் புத்தி பூர்வமாக எதிர்க்க முடியவில்லை. அந்த உரிமைகள் பல நாடுகளில் வழங்கப் பட்டது.

அப்படியே குழந்தைகள் வளர்ப்பதிலும் பல நியமங்கள் ஏற்படுத்தப்பட்டன. கட்டாயக்கல்வி நாகரிகத்தின் அறிகுறியாயிற்று. சில மாதங்களுக்கு ஒருதரம் வைத்தியப் பரிக்ஷையும் சிகிச்சையும் கட்டாயமாகச் செய்யப்பட்டு வருகிறது. உணவிலும், பால் முதலிய சாமான்கள் கட்டாயமாகக் கொடுக்கப்பட வேண்டுமென்று ஏற்பாடுகள் செய்யப்பட்டு வருகின்றன.

இதையெல்லாம் செய்வதற்கு சமூகத்தின் வருமானத்தில் வரியாக எடுத்துக்கொள்ளப்படும் பாகம் அதிகரித்து வருகிறது. எல்லா வருமானங்களையும், அரசாங்கமே எடுத்துக்கொண்டு அவரவர்களுக்கு வேண்டியவாறு உணவும், உடையும், கல்வியும் கொடுக்க வேண்டு மென்பது பூர்ணப் பொதுவுடமை வாதம். அதாவது ஒரு சமூகம் முழுதும் ஒரே அவிபக்த குடும்பம் அல்லது சாவடாக வேண்டும். அப்படிச் செய்தால் குடும்ப வாழ்க்கையே கலைந்து போகுமென்று பலர் அஞ்சுகிருர்கள். அதனல் ஒன்றும் முழுகிப்போகாதென்று மற்றவர்கள் கூறுகின்றனர்.

குடும்பத்தைக் குலையாமல் பார்த்துக்கொண்டு நியாயமும் வழங்க வேண்டுமானல் சொத்துரிமைகளையும், வருமானங்களையும் எவ்வாறு வகுப்பது என்பது சிக்கலான பிரச்னை. இதில் பல சமுதாயங்களில் இருக்கும் நல்ல விதிகளை ஒருங்கே திரட்டி ஒரு நல்ல முறை ஏற்படுத்த முயலவேண்டும்.

குடும்பியாகவிருக்கும் ஸ்திரீக்கோ, புருஷனுக்கோ தனிச் சொத்து இருப்பது நியாயமில்லை. எல்லாச் சொத்தும் வருமானமும் குடும்பத்தைச்சேர்ந்ததாகவே கருதப்படவேண்டும். குடும்பம் ஒற்றுமையாக இருக்கும் வரையில் இப்பொழுதுபோலவே தம்பதிகள் சம்மதத்தின்பேரில வீட்டுநிர்வாகம் நடந்துவரலாம். கணவன், மனைவியின் வருமானங்களைக் குடும்ப வருமானமாகப் பாவித்து, இரண்டையும்சேர்த்து சரிவர பங்கு போட்டுச் செலவு செய்யவேண்டும். குடும்பச் செலவுகளுக்கு ஒழுங்காக கணக்கு வைத்துக்கொண்டு, அவசியமான பொழுது கோர்ட்டுகளிலும், அதிகாரிகளிடமும் தாக்கல்செய்வது இந்த சீர்திருத்தத்திற்கு அடிப்படையானது.

ஒரு சமூகம் நாகரிகத்துடன் வாழவேண்டுமானல், ஒவ்வொரு குடும்பதிற்கும் ஒரு நல்ல வீடும், அதன் சங்கியைக்குத் தகுந்த குறைந்த வருமானமும் இருத்தல் அவசியம். வருமானம் வளராமல் குடும்பத்தை மட்டும் கணக்கின்றிப் பெருக விடுவதால் பெரிய அனர்த்தங்கள் உண்டாகின்றன. ஒவ்வொரு சமூகத்திற்கும் தனது செல்வ நிலைக்கு ஏற்றவாறு ஜனத்தொகையையும் நிர்ணயித்துக்கொள்வது மற்ற சீர்திருத்தங்களுக்கெல்லாம் அஸ்திவாரமாகக்

கருதப்படவேண்டும். இந்த வேலையைத் தனிக் குடும்பங்களுக்கு விட்டுவிட்டால் படிப்பும் அறிவும் மிகுந்த கூட்டத்தார்கள் கர்ப்பத்தடை முறைகளை மிதமிஞ்சிக் கையாண்டு விடுவார்கள். மற்றவர்கள் நாகரீக வாழ்வுக்கு வழியில்லாமல் ஆரோக்கியமும், சுகமும் கெட்டுத் தவிப்பார்கள்.

### விவாகம்

விவாகம் முதலில் எங்கே, எக்காரணத்தால் எவ்விதத்தில் ஏற்பட்டது என்று சொல்லமுடியாது. எல்லா மனித ஜாதிகளிடமும் இது ஒரு சடங்காகக் கொண்டாடப்படுகிறது. ஆனால், இதன் நியமங்கள் மட்டும் மிகவும் வித்தியாசப்படுகின்றன. ஒரு மனிதனுக்குப் பல மனைவிகள் இருக்கும் சமூகங்கள் பல. ஒரு மனைவிக்குப் பல புருஷர்களிருக்கும் சமூகங்களும் சிலவுள. ஒருதரம் விவாகம் செய்துவிட்டால் ஆயுட்காலம் முழுவதும் அதை ரத்துச் செய்ய முடியாதென்று சில சமூகங்களில் நியமமிருக்கின்றது. அதை ரத்து செய்துவிட்டுப் புனர் விவாகம் செய்து கொள்ள மற்ற சமூகங்கள் இடம் கொடுக்கின்றன. கல்யாணம் செய்வதற்குமுன் மற்றவர்களோடு புணர்ச்சியிருக்கலாகாதென்ற சம்பிரதாயம் பெரும்பாலாகப் பரவியிருப்பினும், அதை அனுஷ்டானத்தில் பூர்ணமாக அமுல் செய்யும் சமுதாயங்கள் வெகுசில.

விவாகம் தம்பதிகளுக்குள் ஒரு ஒப்பந்தமா, அல்லது மதக் கட்டுப்பாடா? என்ற விவாதம் அடிக்கடி கிளம்புவதுண்டு. இந்துக்களும், கிறிஸ்துவர்களும் அதை ஒரு மதக்கட்டுப்பாடு என்று சொல்லித் தம் ஏற்பாட்டை சிலாகித்துக் கொள்கிறார்கள். ஆனால் நடைமுறையில் எல்லாச் சமூகங்களிலும் தாம்பத்யமுறை ஒரே விதமாகத்தான் இருந்துவருகிறது. சில தம்பதிகள் அன்னியோன்யமாகவிருந்து இன்பமுடன் குடும்ப வாழ்க்கை புரிகின்றனர். பெரும்பாலார் ஏதோ அதனில் மாட்டிக் கொண்டுவிட்டோம் என்று காலம் கடத்துகின்றனர். சில தம்பதிகள் ஒருவரையொருவர் வெறுத்துக் குடும்பத்தை நாசமாக்கி விடுகின்றனர். ஆதலால் எந்தச் சமூகத்திலும் எல்லோருக்கும் ஒரேவித நியமங்கள்பொருந்துமாவென்பது சந்தேகம். விவாகமாவதற்கு முன்னமேயே எவருக்கு எந்நியமங்கள் பொருந்துமென்று நிர்ணயிப்பதற்கும் வழியில்லை. ஏதோ சில நியமங்கள் செய்து, அவ்வப்போது தேவைக்கேற்றவாறு அவைகளை மாற்றிவருவதே சாத்தியமானதாகத் தோன்றுகிறது.

குழந்தை பிறந்தவுடனேயே அதன் கல்யாணத்தைப் பற்றிக் கவலைகொண்டு கூடிய சீக்கிரம் விவாகத்தை முடித்துவிடுவது பெற்றோர் கடமையென்று வெகுகால வழக்கமாக இருந்து வந்திருக்கிறது. இதற்கு நல்ல பல காரணங்களுண்டு. காம எண்ணங்கள் தோன்றுவதற்கு முன்னமேயே விவாகம் செய்துவிட்டால் அவைகளால் குழப்பம் ஏற்படாது; எல்லோருக்கும் கலியாணமாக வேண்டுமானால் அழகு, சாமர்த்தியம் முதலிய குணங்களைப்பற்றி அதிக சர்ச்சை செய்யக்கூடாது; எவ்வாறு குழந்தைகள் தங்கள் பெற்றோர்களின் குணங்களைப்பற்றிச் சிந்தனை செய்யாது அவர்களை நேசிக்கிறார்களோ, அவ்வாறே கணவன் மனைவியையும், மனைவி கணவனையும் தெய்வத்தால் கொடுக்கப்பட்டதாகக் கருதி

பரஸ்பரம் அன்புகொள்ளக் கற்றுக் கொள்ளவேண்டும். எப்படி ஒவ்வொருவனுக்கும் கட்டாயமாகக் கல்வியும், தொழிலும் கொடுக்கப்படவேண்டுமோ, அவ்வாறே வாழ்க்கைத்துணையும் சமூக ஏற்பாட்டால் வழங்கப்படவேண்டும் – என்று கூறலாம்.

இக்காலத்து மேனாட்டு சம்பிரதாயம் இதற்கு நேரிடையான கொள்கைகளை ஆதரிக்கிறது. விவாகம் நல்ல வயது வந்த யுவர்களின் சுதந்திர உரிமைகளுள் முக்கியமானது. இதில் பெற்றோர்களும், பந்துக்களும் தலையிடக் கூடாது. பையனும், பெண்ணும் காதல்கொண்டு கூடினாலன்றி உயிர்வாழ முடியாதென்ற தீர்மானத்திற்கு வந்தே விவாகம் செய்துகொள்ள வேண்டும். தன் மனதிற்கு இசைந்த மனைவி கிடைக்கும் வரையில் வாலிபன் பொறுத்திருக்கவேண்டும். தன் காதல் கணவன் கிடைக்கும் வரையில் கன்னிகை காத்திருக்கவேண்டும். அப்படிக் கிடைக்கா விட்டால் காதல் தெய்வத்தைக் கற்பனையால் பூசித்துத் தன்னந்தனியே வாழ்க்கை நடத்துவதே மேல். காதலில்லாமல் கல்யாணம் செய்து கொள்ளுவது மனித வாழ்க்கையை மிருகத்தனமாகச் செய்வதாகும். காதலின் மகிமையைக் கவிகள் வர்ணிப்பதில் பயனென்ன? ஒவ்வொருவரும் தம் வாழ்க்கையில் அதைச் சிறிது அனுபவிக்க வேண்டியது கடமையல்லவா?

இக் காதல் முறையே வாலிபர்களின் உள்ளத்தைக் கொள்ளை கொள்ளத் தக்கதென்பதில் சந்தேகமில்லை. பெரும்பாலோர் எளிதில் இதன் மூலம் தங்கள் துணைவர்களை சம்பாதித்துக் கொள்ள முடியுமானால் சமூகத்தின் சுகம் இதனால் அதிகரிக்கும் என்பதை எவரும் மறுக்கமுடியாது. ஆனால் அதில் பல கஷ்டங்களுண்டாகின்றன. வாலிப பருவத்தில் ஆண்களும் பெண்களும் சுலபமாகக் கலந்து வாழும் சமூகத்தில் தான் விவாகத்திற்கு முன் காதல் தோன்ற முடியும். அப்பொழுது உண்மையான காதல் உண்டாகும் முன்னமேயே காமத்தால் கூடிப் பிறகு காதல் இல்லையென்று கண்டு கொள்ளலாம். அப்படிக் கூடுவதால் ஒன்றும் முழுகிப் போகாதென்று பல மேனாட்டு ஆசிரியர்கள் கூறுகின்றனர். விவாகம் செய்துகொள்வதற்கு முன் கொஞ்சகாலம் பரீட்சா தாம்பத்தியம் நடத்திப் பிறகே இருவரும் மனமொப்பினால் விவாகம் செய்து கொள்ளவேண்டும், இல்லாவிடில் பிரிந்துபோக வேண்டும் என்கிறார் அமெரிக்க நியாயாதிபதி லிண்ட்ஸே என்பவர். முதலில் வாலிபத்தில் காமத்தைத் தீர்த்து பிறகு மத்திய வயதில் விவாகம் செய்துகொள்வதுதான் சரியென்கிறார் பிரான்ஸின் மாஜி பிரதம மந்திரி புளூம். ஆனால் இவ்வித யோசனை சொல்லுவோர் சில முக்கிய விஷயங்களை மறந்து விடுகின்றனர். இந்த விஷயத்தில் ஆணையும், பெண்ணையும் சரிசமானமாக வைத்துப் பேசுவது வாதத்திற்கு அழகாக விருக்கலாம். ஆனால் இயற்கைக்கு விரோதமாகும் விவாகமில்லாமல் குழந்தைகள் பிறப்பதனால் விவாகமே அவசியமில்லை. புருஷன் தன் குழந்தைகளுக்குப் பொறுப்பேற்றுக் கொள்ள வேண்டுமென்பதே விவாகத்தின் முக்கிய நோக்கம். இந்த தர்மம் தவறினால் விவாகமுறையின்றியே சமூகம் நடைபெறக்கூடும். குழந்தைகளையெல்லாம் சமூகம் போஷிப்பதற்குப் பொறுப்பேற்றுக்கொண்டு விவாகத்தையே விட்டுவிட வேண்டுமென்று கூட சிலர் சொல்கிறார்கள். இது சாத்தியமில்லை என்று

தர்க்கத்தால் நிரூபிக்க முடியாது. ஆனல் மனிதனுடைய கல்வியும், கற்பனையும், கவிதையும் இயற்கையாலுண்டான காமத்தைப் பன்முறை பெருக்கியிருக்கின்றன. அதை நியமங்களால் கட்டுப்படுத்தினலொழிய, மனித சமூகங்கள் சக்தியிழந்து கலகம் பெருகி குழப்பமடைந்து, சீர் குலைந்துவிடுமென்ற பயம் எல்லா அறிஞரின் உள்ளத்திலும் தோன்றும். தவிரவும், இளம்வயதில் குழந்தைகளைப் பெற்ருேரின் அன்பின்றி மந்தைகளில் வளர்ப்பதும் சாத்தியமாகத் தோன்றவில்லை. முதல் ஐந்து வயதில் குழந்தை கற்றுக்கொள்வது வெளித்தோற்றத்திற்கு அல்பமாகக் காணப்படினும், உண்மையில் அது மீதி ஆயுளில் கற்பதைக் காட்டிலும் அதிகமென்று மன ஆராய்ச்சி நிபுணர்கள் கூறுகிருர்கள். பாஷையும், பழக்க வழக்கங்களும் கற்பிப்பதற்கு குழந்தைகளுக்குத் தனித்தனி குருக்கள் தேவை. பெற்ருேர்களுக்கு இத் தொழிலை விட்டுவிடுவதே நலமென்கிருர்கள். இதற்கு நேர் விரோதமாக எவ்வளவு சீக்கிரம் குழந்தைகளைப் பெற்ருேர்களிடமிருந்து எடுத்துப் பொதுப்பள்ளிக் கூடங்களுக்கு அனுப்புகிருேமோ, பொது நல சேவைக்குப் பழக்குவதற்கு அவ்வளவு சுலபம் என்றும் சிலர் கூறுகிருர்கள். ஆனல் இவர்கள் கூட, பிறந்தவுடனேயே தாயிடமிருந்து குழந்தையை எடுத்துக்கொண்டு போய்விட வேண்டுமென்று கூற முன்வரவில்லை.

விவாகத்திற்குமுன் காதலை வேண்டி காமத்தில் பரிட்சை செய்பவர்கள் குழந்தை பெருமல் தடுக்கவேண்டியிருக்கிறது. கர்ப்பத்தடை முறைகளை உபயோகிப்பது தர்மமா, அதர்மமா என்று பலமாக வாதிக்கப்படுகிறது. அவைகள் இயற்கைக்கு விரோதம் என்ற வாதம் ஒப்புக்கொள்ளத் தகுந்ததல்ல. ஒரு விதத்தில் மனிதன் செய்யும் எல்லாக் காரியங்களும் இயற்கைக்கு விரோதம்தான். மனித அறிவும் ஓர் இயற்கை சக்தி என்று ஒப்புக்கொண்டால் புத்தி பூர்வமாக நாம் செய்யும் எல்லாக் காரியங்களும் இயற்கைதானென்றும் கூறலாம். ஆதலால் கர்ப்பத்தடை முறைகளை உபயோகிப்பதால் ஏற்படும் பலன்களைக் கொண்டே அவை நன்மை தீமை என்று தீர்மானிக்கவேண்டும். குழந்தை பெறும் விசித்திர சக்தியைத் தீர விசாரியாமல் தடுப்பதால் மகத்தான அனர்த்தங்கள் ஏற்படுகின்றன. தனி மனிதர்களுக்கும், குடும்பங்களுக்கும் குறுகிய காலத்திற்கு அற்பசுகம் கிடைப்பதற்காக சமூகத்தின் வருங்கால வாழ்வைக் கெடுத்து விடக் கூடாது. மிதமிஞ்சி கர்ப்பத்தடை முறைகளை உபயோகப்படுத்தியதால் பிரான்ஸ், பிரிட்டிஷ், அமெரிக்க சமூகங்களின் சங்கியை வருங்காலத்தில் மிகவும் குறைந்து முடிவில் பூமியிலிருந்து மறைந்துவிடக் கூடுமென்று அறிஞர்கள் கணக்கிட்டு அதைத் தடுப்பதற்கு தீவிர பிரசாரம் செய்து வருகின்றனர். இளம்வயதில் கன்னிகைகள் அம்முறைகளை உபயோகிப்பதால் அவர்களின் ஆரோக்கியத்திலும், மனோபாவங்களிலும் விபரீதமான பலன்கள் உண்டாகின்றனவென்றும் பல வைத்தியர்கள் கூறுகின்றனர்.

மெய்க்காதல் தோன்ருதவர்களுக்கும் காமமுண்டு. அவர்கள் என்ன செய்வது? பிரம்மச்சாரிகளாகவும், கன்னிகைகளாகவுமே ஆயுள் முழுவதும் இருந்துவிட முடியுமோ?

காதலென்பது ஒரு நித்திய நிலையன்று. சில காலத்திற்குப் பிறகு பழக்கத்தாலும், காதலர்களின் உடலும் மனமும் மாறுதலாலும் அது குறைந்து போகும். அப்பொழுது விவாகத்தை ரத்து செய்து விடுவதா?

காதலின் அவசியத்தை மிகைப்படுத்துவதால் இவ்விதமான பல சங்கடங்கள் நேரிடுகின்றன. அதற்கு நேர்மாருக, அதை வேரோடு களைந்துவிட வேண்டுமென்ற ஹிந்து மத ஏற்பாடும் சரியானதாகத் தோன்றவில்லை. வாழ்க்கையில் துக்கம் ஏற்படலாம் என்று நாம் தற்கொலை செய்து கொள்ளுவதில்லை. உண்மையில் காதல் ஏற்படும் பொழுது அது உயர்ந்த அனுபவமென்பதை மறுக்கமுடியாது. அதைத் தடுக்கும் எந்த ஏற்பாட்டையும் மனப் பூர்வமாக ஏற்றுக்கொள்ள முடியாது.

குழந்தைப் பருவத்தில் கலியாணம் செய்வதால் காமத்தைக் குறைக்கலாம், காதலைத் தடுக்கலாம். ஆனுல் அதனுல் வேறு பல அனர்த்தங்கள் உண்டாகின்றன. தேகமும், மனமும், நன்கு வளரு முன் இளம்பிராயத்தில் தாம்பத்திய வாழ்க்கை தொடங்குவதால் இரண்டும் குன்றி சமூகத்தின் சக்தியே குறைந்துவிடுகிறது. கல்வி கெட்டுவிடுகிறது. மனைவியிடம் மரியாதையில்லாமல் போய்விடுகிறது. குடும்ப வாழ்க்கை ரசமில்லாமல் சூன்யமாகி விடுகிறது.

இவ்விரண்டு கொள்கைகளுக்கும் மத்தியில் ஒரு வழியுண்டா? அதைத் தேடினுல் இவ்விரண்டிலுமுள்ள நன்மைபோய், தீமைகள் மட்டும் மிஞ்சாதா? கதையெல்லாம் அனுபவத்தின் பேரில் தான் முடிவு செய்யமுடியும். இந்தியாவைப் பொறுத்த வரையில் இந்த மத்திய மார்க்கத்தைத் தேடுவதைத் தவிர வேறு வழியில்லை. குழந்தைப் பருவத்தில் விவாகம் செய்யும் வழக்கம் குன்றி வருகிறது. பிரம்மசாரிகளும் கன்னிகைகளும் கூசாமல் கலக்கும் காலம் சமீபத்திலிருப்பதாகத் தோன்றவில்லை. பையன், பெண், இருவரின் அபிப்பிராயங்களையும் கலந்து பெற்றேர்களே விவாகத்திற்கு ஏற்பாடு செய்ய வேண்டியிருக்கிறது. தேசத்தில் காங்கிரஸ், முஸ்லிம் லீக், ஹிந்து மகா சபா, பிரிட்டிஷ் சர்க்கார் எல்லோரும் சேர்ந்து ஒரு காரியம் செய்வதில் எவ்வளவு கஷ்டமிருக்கிறதோ, ஒவ்வொரு விவாகத்திலும் அவ்வளவு பிரயாசையிருக்கிறது. முடிவில் தம்பதிகள் சுகப்படுவது அதிர்ஷ்டத்தைப் பொறுத்தது தான். நாம் என்ன மந்திரம், தந்திரம் செய்தாலும் விவாகம் சூதாட்டமாகத்தான் இருந்துவரும்.

3568

எப்படியோ கல்யாணமாகி விடுகிறது. அதன் பிறகு தம்பதிகளின் தர்மம் என்ன? பல சமூகங்களில் ஆணுக்கு ஒரு விதி பெண்ணுக்கு ஒரு விதியாக இருந்து வருகிறது. புருஷன் வேறு மனைவிகளை மணக்கலாம். மணக்க உரிமையில்லாவிட்டாலும் மற்ற ஸ்திரீகளோடு சம்பந்தம் வைத்துக் கொள்ளலாம். ஆனுல் மனைவியோ தன் பதிவிரதா தர்மம் தவறினுல் இம்மையில் இகழப் பட்டு மறுமையிலும் நற்கதியில்லாமல் போவாள் என்பது இந்து தர்மம், இது தவறு. இருவருக்கும் ஒரே தர்மந்தான் இருக்க வேண்டும் என்று சொல்லிவிடுவது சுலபம். ஆனுல் அந்தச் சம தர்மத்தை நிச்சயிப்பது கஷ்டம். நிச்சயித்தாலும் அதை அமுல் செய்வது அதிகக் கடினம். விவாகம் செய்த பிறகும் புருஷனும்

மனைவியும் தம் தம் இஷ்டப்படி இருக்கச் சம்மதிக்கவேண்டும் என்கிறார்கள் சிலர். அப்படியானால் விவாகம் எதற்கென்று புரியவில்லை. மிகவும் கடுமையான தர்மவாதிகள் இருவரில் ஒருவர் வேறு சம்பந்தம் வைத்துக் கொண்டால் உடனே விவாகத்தை ரத்து செய்துவிட வேண்டுமென்கிறார்கள். அப்பொழுது குழந்தைகளின் கதி என்ன ஆவது? ஒரு தம்பதிகளுக்கு இரண்டு, மூன்று குழந்தைகள் பிறந்த பிறகு விவாக ரத்து செய்துவிட்டால் இருவரும் புனர் விவாகம் செய்து கொள்ள சமநிலையில் இருக்க முடியுமா? சமூக விருத்திக்காக, ஸ்திரீகளுக்குப் புருஷர்களைக் காட்டிலும், அதிக பாரமான பொறுப்பை, இயற்கை கொடுத்திருக்கிறதென்பதை மனித நீதியால் மாற்றமுடியாது. ஆதலால் பதிவிரதா தர்மத்தை விசேஷமாக ஸ்திரீகளுக்கு ஹிந்து மதம் போதிப்பதில் ஒரு உண்மை இருக்கின்றது. ஒருவர் தவறு செய்தால் அதற்கு மாற்று மற்றவர் தவறு செய்வது அல்ல. தாய்மார்களே குடும்பத்திற்கு முக்கிய ஆதாரமாதலால் பரிசுத்தத்திலும், பொறுமையிலும், அவர்கள் வழி காட்டவேண்டுமென்பது ஸ்திரீகளுக்குப் பெரிய கௌரவமளிப்பதாகும். ஆனால் இந்த நியாயத்தைச் சகிக்கமுடியாத தூரத்திற்குக் கொண்டு போய்விட்டது இந்து மதத்தின் பெரிய தவறாகும். விதவைகள் புனர் விவாகம் செய்யக்கூடாது, புருஷன் எக்கொடுமை செய்தாலும் விவாக ரத்து உரிமையில்லை என்ற பல சட்ட வித்தியாசங்களை ஒரு நாளும் சரியென்று ஒப்புக்கொள்ளமுடியாது. சட்டப்படி சமத்துவம் கொடுத்து, அந்த உரிமைகளை உபயோகப்படுத்துவதில் பெண்கள் அதிஜாக்கிரதையாக இருந்து கூடிய வரையில் குடும்பங்களைக் காப்பாற்றவேண்டுமென்பது நியாயமாகும்.

ஒரே சமயத்தில் ஒரு புருஷனுக்கு ஒரு மனைவிதான் இருக்கவேண்டும், ஒரு மனைவிக்கு ஒரு புருஷன்தான் இருக்கவேண்டும் என்ற நியமம் நியாயமாகத் தோன்றுகிறது. ஆனால் ஒரு புருஷனுக்குப் பல மனைவிகள் இருக்கலாமென்ற நியமம் பல சமூகங்களில் பல்லாயிரக் கணக்கான வருஷங்களாக இருந்துவருகின்றன. எத்தனை நாள் இருந்தாலென்ன? நியாயம் நியாயந்தானே என்று கூறலாம். ஆனால் சற்று ஆலோசித்தால், கடுமையான ஏக பத்தினி நியமம் சட்டபூர்வமாக சாதிக்கப்படவேண்டுமா என்பதில் சந்தேகம் ஏற்படும். தன் மனைவியிடம் வெறுப்புண்டான பிறகே ஒரு புருஷன் வேறு ஸ்திரீகளை நாடுகிறான் என்பதில்லை. பரஸ்திரீ சம்பந்தமுள்ளவர்களும் தம் குடும்பத்தில் அன்புள்ளவர்களாயிருப்பதைக் காண்கிறோம். அந் நிலையில் குடும்பத்தைக் கலைத்துவிடுவதால் சமூகத்திற்கே நஷ்டமேயொழிய லாபமில்லை. ஒரே மனைவிதான் இருக்கவேண்டுமென்ற சட்டமிருக்கும் நாடுகளில், புருஷர்கள் பிறரைக் கண்ணெடுத்துப் பார்க்காமல் இருக்கிறார்களாவென்றுவிசாரித்தால், அங்குதான் நிலைமை மோசமாயிருக்கிறது. பாசாங்குதான் மிச்சம். முதல்மனைவி சம்மதித்தால் இரண்டாம் மனைவியைக் கல்யாணம் செய்ய சட்டப்படி உரிமையிருப்பதால் தர்மம் குறையாது. ஆனால் அந்த நிலையை என்று வேண்டுமானாலும் தீர்த்துக்கொள்ள மனைவிக்கு உரிமையிருக்க வேண்டும்.

அப்படியே ஒருமனைவிக்கு இரண்டுபுருஷர்களிருப்பதைச் சட்டம் சம்மதிக்கலாமாவென்று கேட்பார்கள். பழக்கமில்லாததால்

இது ஒரு அதர்மமாகத் தோன்றுகிறது. சட்டப்படி சாத்தியமாயி னும் சம்பாவிதமானதன்று. ஆயினும் பாரதத்தில் வருவதுபோல கோடியில் ஒருத்திக்கு அவ்விதம் அவசியம் நேரிடக்கூடும். அது அனுமதிக்கப்படக்கூடாது என்று சொல்லுவதற்குக்காரணமில்லை.

தாம்பத்தியத்தைப்பற்றி கல்யாணமாவதற்கு முன் உபதே சிக்கவேண்டுமா, என்னென்ன உபதேசிக்கவேண்டும், எவ்வாறு உபதேசிக்கவேண்டும் என்னும் பிரச்னைகளைப்பற்றிப் பலமான விவாதம் நடந்துகொண்டிருக்கிறது. முன்னாட்களில் காம இந் திரியங்களைப்பற்றியும், குழந்தைகள் பிறக்கும் விதத்தைப்பற்றியும் பேசுவதோ, படிப்பதோ குற்றமென்று கருதப்பட்டது. இதனால் குழந்தைகளும், வாலிபர்களும் இவ்விஷயங்களில் ரகசியமாகவும், தகாத வழிகளிலும், மனதைச் செலுத்துவதைப் பார்த்து, இவ்விஷ யங்களையெல்லாம் பள்ளிகளில் போதிப்பதே நலமென்று பலர் பிரசாரம் செய்கிறார்கள். இதைப்பற்றியும் ஓர் நடுநிலைமையான முறையை அனுஷ்டிப்பதே நலமென்று தோன்றுகிறது. இயற்கை யில் பறவைகள் முட்டைகள் இடுவதையும், குஞ்சு பொறிப்பதை யும், மிருகங்கள் குட்டி போடுவதையும், குழந்தைகளிடமிருந்து ஒளிப்பது புத்திசாலித்தனமல்ல. உண்மையை உள்ளவாறேகற்பிக்க வேண்டும். ஆனால் அனுபவமில்லாத குழந்தைகளிடம் காமத்தைப் பற்றிப் பிரஸ்தாபித்தால் அவர்கள் மனம் கலைந்துவிடும். 17, 18 வயதுக்குமேல் எல்லா வாலிபர்களுக்கும் காமத்தின் தன்மையைப் பற்றியும், அதனால் ஏற்படும் வியாதிகளைப்பற்றியும் குடும்பம் நடத்துவதற்கு அவசியமான விஷயங்களைப்பற்றியும் தெளிவாக போதிப்பதால் நல்ல பிரயோசனம் உண்டாகும். ஜப்பான், சைனா முதலிய தேசங்களில் குடும்ப வாழ்க்கையை ஒரு கலையாகப் பாவித் துப் பெற்றோர் தம் மக்களுக்குப் போதிக்கிறார்களென்று சொல்லப் படுகிறது. அப்படிச் செய்வதுதான் சரி. இருவர் நீண்டகாலம் சேர்ந்து சுகமாயிருப்பது மிகவும் சிரமசாத்தியமானது. சம்பத்தி லும், தரித்திரத்திலும், கோபத்திலும், தாபத்திலும், சுகத்திலும், துக்கத்திலும, ஒருவரை யொருவர் நேசிப்பது சுலபமன்று. அதற் கேற்ற மனப்பான்மையை வளர்க்கும் சமூகங்களில்தான் குடும்ப வாழ்க்கை நிலைபெற்று சுகமாகவிருக்கும்.

### குழந்தைகள்

பத்து மாதம் சுமந்து பெரிய வேதனையுடன் பெற்று, பால் கொடுத்து வளர்த்தேனே என்கிறாள் தாயார். எவ்வளவோ பாடு பட்டுப் பணம் தேடிப் போஷித்துப் படிக்கவைத்தேனே என்று நினைக்கிறார் தகப்பனார். இந்தக் கஷ்ட உலகில் என்னை ஏன் பிறக் கும்படி செய்தார்கள் என்று சிந்தைகொள்ளுகிறார்கள் குழந்தை கள். குழந்தைகள் வளர வளர அதற்கும் பெற்றோர்களுக்குமுள்ள வித்தியாசங்களும் விருத்தியாகின்றன. தாய்தந்தையர் எப்பொழு தும் பிற்காலத்தை நோக்குகின்றனர். மக்களோ வருங்காலத்தை எதிர்பார்த்தவண்ணமாகவே இருக்கின்றனர். பதினாறு வயதுக்கு மேற்பட்ட மகனை மித்திரனாகப் பாவிக்கவேண்டுமென்று இந்து தர்ம சாத்திரம் கூறுகின்றது. இதை எல்லோரும் அனுஷ்டித்தால் குடும்பத்தில் மனஸ்தாபத்திற்கு அதிக இடமிராது.

குழந்தைகளின் கல்வியைப்பற்றியும் தீவிர அபிப்பிராய பேதங்கள் இருக்கின்றன. ஏழெட்டு வருஷமாவது வீட்டிலிருந்து

கல்வி கற்பது மேல் என்று சிலர் கூறுகின்றனர். தாய் தந்தையர் கெட்டிக்காரர்களாக இருந்தால் குழந்தையின் சுபாவத்தையும், விசேஷ சக்தியையும் நன்கு கவனித்து அதற்கேற்ற கல்வி கொடுக்க முடியும். ஆனால் பெரும்பாலான பெற்றோர்கள் நான்கு வயதிலேயே குழந்தைகளைப் பள்ளியிலடைத்தால் தொந்திரவு குறையும் என்று நினைக்கிறார்கள். எவ்வளவு சீக்கிரம் சமூகப் பள்ளிக்கூடங்களில் குழந்தை சேர்க்கப்படுகின்றதோ, அவ்வளவு நன்றாகப் பொதுநலசேவைக் கொள்கைகளும், ஒழுங்கான பழக்க வழக்கங்களும் கற்பிக்கப்படக் கூடுமென்று பலர் நினைக்கிறார்கள். பொதுவுடைமை நாடாகிய ரஷ்யாவிலும், ஏதேச்சாதிகார நாடாகிய ஜெர்மனியிலும் குழந்தைப்பருவத்திலேயே தங்கள் கொள்கைகளை மனதில் முத்திரை போட்டுவிடவேண்டுமென்று அவசரப்படுகின்றார்கள். இங்கிலாந்து முதலிய முதலாளி நாடுகளிலும் பணக்காரர்கள் குழந்தைகளை நாலைந்து வயதிலேயே பொதுப் பள்ளிக்கூடங்களுக்கு அனுப்பிவிடுவது சகஜமாயிருக்கிறது.

கொஞ்ச காலமாவது கட்டாயக்கல்வி கற்றுக்கொடுக்கப்பட வேண்டுமென்று பொதுவாக ஒப்புக்கொள்ளப்படுகிறது. ஆனால் எவ்வளவு வருஷங்கள், எவ்விதக் கல்வி கற்பிக்கப்பட வேண்டுமென்பதில் எவ்வித அபிப்பிராயமும் ஏற்படவில்லை. அதிக நிர்ப்பந்தமின்றி மலர் மாதிரி குழந்தைகளும் வளர வேண்டுமென்று கூறுவது இக்காலத்தில் வழக்கமாக இருக்கின்றது. அபூர்வமாக நூற்றில் ஒரு குழந்தை இந்த வழியில் தன் முழு சக்திகளின் வளர்ச்சி பெறுகின்றது. ஆனால் சாதாரணமாக ஓரளவு கட்டுப்பாடும், நியமமும் இருந்தாலொழிய பெரும்பான்மையான குழந்தைகள் தங்கள் காலத்தை வீணாக்கி விடுவார்கள். தேகப்பயிற்சியிலும், மனவளர்ச்சியிலும் கட்டாயத்தையும், சுதந்திரத்தையும் நியாயமாகக் கலந்து கல்வி அதிகபாரமில்லாமல் அமைப்பதே லக்ஷியமாக இருக்க வேண்டும்.

இக்காலத்திய நாகரீகத்திற்குப் பதினைந்து வயது வரையில் படித்தாலொழிய போதிய பொதுஅறிவு கொடுக்கமுடியாதென்று கண்டு அமெரிக்கா, இங்கிலாந்து, ஜெர்மனி முதலிய தேசங்களில் எல்லாப் பையன்களும், பெண்களும் இவ்வயது வரையில் பள்ளிக்கூடங்களில் படிக்கும்படி கட்டாயப்படுத்துகிறார்கள். விவசாயம் பிரதானமான நாடுகளில் இது சாத்தியப்படுமாவென்பது சந்தேகம். பதினைந்து வயதிற்குமேல் வெட்டுவதற்கும், கொத்துவதற்கும், தோட்டவேலை செய்வதற்கும் கற்றுக்கொள்ளுவது சுலபமல்ல.

பதினைந்து வயது வரையில் பொதுக்கல்வி. அதற்குப் பிறகு தொழிலுக்கு மறுபடியும் பத்துவருஷம் படிக்கவேண்டும். ஆயிரக்கணக்கான ரூபாய்கள் செலவு செய்யவேண்டும். மத்தியதரக் குடும்பத்தார்களிடம் நாஜி, பாஸிஸ்ட் கொள்கை பரவுவதற்கு இந்த பாரத்தின் கொடுமை முக்கிய காரணமாக இருக்கின்றது. வாலிபர்களை பலாத்காரமாக சைன்யத்தில் சேர்த்துக்கொள்வதால் பெற்றோர்களுக்குப் படிப்புச் செலவு மிஞ்சுகிறது. பையன்களுக்கும் வருங்காலத்தைப்பற்றிய கவலை குறைகிறது. எல்லோருக்கும் படிப்பும் சமூகச் செலவில் கொடுத்து, வேலையும் நிச்சயமாக வழங்கும் தேசத்தில் சண்டையைப் பலர் விரும்பமாட்டார்கள்.

ஜனத்தொகை குறைந்திருந்த நாடுகளில், குழந்தைகள் பெறுவதற்குத் தவம் செய்தனர். இந்நாட்களிலோ குழந்தைகளைத் தடுப்பதற்குத் தந்திரம் செய்கின்றனர். சமூகத்தின் வருமானத்தைக் கூடிய வரையில் நியாயமாகப் பிரிவினை செய்யவேண்டிய தன் அவசியத்தைப்பற்றி முன் கூறப்பட்டது. குழந்தைகளுக்கும் அப்படியே வீதம் வகிப்பதும் நியாயமாகத் தோன்றுகிறது. வியாதியுள்ள புருஷர்களும், ஸ்திரீகளும் குழந்தைகள் பெருதவாறு தடுப்பது அத்தியாவசியமானது. நூறு வருடத்தில் ஒரு தம்பதிகள் மூலம் பதினறு தம்பதிகள் உற்பத்தியாகும. வியாதியை இவ்விதம் வளரவிட்டால் சமூகம் பலஹீனமாகப் போகாமல் இராது. ஆரோக்கியமுள்ள ஒவ்வொரு தாய்க்கும் அந்தந்த சமூகத்துக்கு இரண்டு, மூன்று, நான்கு குழந்தைகள் பெறுவது கடமையாகக் கருதப்படவேண்டும். அழகிலும், ஆரோக்கியத்திலும், புத்தியிலும் சிறந்த குழந்தைகள் பெறும் தம்பதிகளுக்கு இந்த விகிதத்திற்குமேல் குடும்பத்தை விருத்திசெய்ய அனுமதி கொடுக்கப்படலாம். ஜனத்தொகையைக் கட்டுப்படுத்துவதில் அறிவைச் செலுத்தாத சமூகத்தில் மற்ற எந்த ஏற்பாடும் ஒழுங்காக இராது.

எந்த நியமங்களுக்கும் கட்டுப்படாத குழந்தைகளே இவ்வுலகத்தில் பெரிய ஞானிகளாகவும், தீரர்களாகவும், கலைஞர்களாகவும், கவிகளாகவும் இருந்திருக்கின்றனர். ஆதலால் மற்றக் குழந்தைகளிலிருந்து மாறுபட்டிருக்கும் குழந்தைகளைப் பெற்ரேரும், சமூகமும் வெகு ஜாக்கிரதையுடன் கவனிக்கவேண்டும். ராமானுஜத்தின் கணித ஞானத்தின் பெருமையைக் காலத்தில் அறிந்திருந்தால் எவ்வளவு நலமாகவிருந்திருக்கும். எந்தச் சமூக நியமத்திற்கும் விலக்கு உண்டு என்பது குழந்தைகளிடத்தில் மிகவும் பொருந்தும்.

குழந்தைகளை அன்புடன் வளர்க்கவேண்டும். ஆனல், அன்பின் பெயரால் அதிகமாகச் சலுகை கொடுத்தும், பயமுறுத்தியும் அவைகளைச் சோம்பேறிகளாகவும் பயங்காளிகளாகவும் செய்வதைக் காண்கிரும். பிற்காலத்தில் அக்குழந்தைகள் பெற்ரேர்களை வெறுப்பதில் ஆச்சரியமில்லை. ஆரோக்கியத்திற்குத் தகாத தின்பண்டங்களைக் கொடுப்பதும், அனுவசியமாகத் தூக்கிக் கொஞ்சுவதும் உண்மையான அன்பாகாது. குழந்தையைப் பொம்மையாகப் பாவித்து தனக்கு விநோதத்தைத் தேடுவதாகும். உள்ளத்தில் அன்பும், காரியத்தில் அறிவும் உள்ள பெற்ரேர்களே மக்களின் நன்றிக்குப் பாத்திரமாவார்கள்.

குழந்தைகளைச் சொத்தாக நினைப்பவர்கள் அவைகளுக்காக எவ்வளவு பாடுபட்டாலும், எவ்வளவு பணம் செலவு செய்தாலும் அன்பையோ நன்றியையோ ஒரு நாளும் பெறமாட்டார்கள். தங்கள் குழந்தையைப் பெற்ரேர் வளர்ப்பது சகஜமாகவிருப்பினும் எக்குழந்தையைப் பார்த்தாலும் சந்தோஷப்படுவோரே சொந்தக் குழந்தையிடம் உண்மையான அன்பு கொள்ள முடியும். குழந்தையில்லாதவர்கள் அதிகக் குழந்தைகளுள்ள குடும்பங்களிலிருந்து ஸ்வீகாரமாக எடுத்துக்கொண்டு வளர்க்கும் வழக்கம் பெருக வேண்டும். பிரதிப்பிரயோசனத்தை எதிர்பாராமலும், பொய்யபிமானமில்லாமலும் சமூக சேவை செய்வதற்கு இது சிறந்த வழி.

**பந்துக்கள்**

மனைவியோடு நேசமாக வசித்து விடலாம். குழந்தைகளை நன்றாக வளர்த்துவிடலாம். பந்துக்களிடம் நியாயமாகப் பழகி நல்ல பெயர் எடுப்பவனை சித்த புருஷன் என்றுதான் சொல்லவேண்டும்.

பந்துக்கள் யார் என்பது சமூகப் பழக்க வழக்கங்களைப் பொறுத்திருக்கிறது. ஹிந்து மதத்தில் தந்தை, தாய் வழிகளில் மூன்று தலைமுறைக்குள்ளிருக்கும் எல்லாரும் பந்துக்கள் என்று சொல்லப்பட்டிருக்கிறது. எல்லோரும் தங்கள் ஊர்களிலேயே கலியாணம் செய்துகொண்டு பரம்பரையான தொழில்கள் செய்து வந்த காலங்களில் இந்த முறை ஒழுங்காக அனுசரிக்கப்பட்டு வந்தது. ஆனால் பல ஊர்களில் விவாகம் செய்து பல உத்தியோகங்கள் பார்க்கும் வழக்கம் பரவியதிலிருந்து மத்திய வகுப்பார்களிடம் பந்துக்களின் கட்டுப்பாடு குலைந்துவிட்டது. பழைய சம்பிரதாயப்படி நடந்துவிடும் குடியானவர்களிடம் இன்றும் கட்டுப்பாடு குறையாமல் இருந்து வருகிறது. விவாகத்திற்கு வராமற் போனால் விரோதம். கருமாதிக்குக் கூடாமற்போனால் கோபம். ஒவ்வொரு பங்காளியும் கிரமப்படி மொய் வைக்கவேண்டும்.

விபீஷணன் ராமனிடம் சரணாகதிக்கு வந்தபொழுது, சுக்ரீவன் 'இவன் ராவணனுடைய சகோதரன். ஆபத்துக் காலத்தில் தன் பந்துவை விட்டு வருகிறான், நமக்கு நம்பிக்கைத் துரோகம் செய்யாமலிருப்பானா?' என்று கேட்டான். அதற்கு ராமன் 'எல்லோரும் பரதனைப்போன்ற பந்துவாக இருக்கமாட்டார்கள். பங்காளிகள் சண்டை போடுவதுதான் சகஜம்' என்று பதில் சொன்னார்.

பந்துக்களின் கடமையை நித்தியம் நைமித்திகம் என்று இரண்டு வகையாகப் பிரிக்கலாம். கலியாண சமயங்களிலும் மரண காலங்களிலும் கூடுவது நித்திய கடமையாகப் பாவிக்கப் படுகிறது. இதற்காகவே கல்யாணம் ஐந்து நாட்களும், கருமாதி பதின்மூன்று, பதினாறு தினங்களும் கொண்டாடப்படுகின்றன. ஒரு நாள் கலியாணம் தலைப்பட்டதிலிருந்து பந்துக்கள்பாடு பெரிய அவஸ்தையாகிவிடுகிறது. தம்பதிகள் வந்து சேருவதற்குள் சில வேளை கலியாணம் முடிந்து சம்பந்திகள் புறப்பட்டுப் போய் விடுகிறார்கள். ஆதலால், கடிதத்தில் தம்பதிகளை ஆசீர்வதித்து பந்து தன் கடமையைச் செய்துவிடும் வழக்கம் வளர்ந்து வருகிறது. துக்கத்தையும் தபால் மூலமாக விசாரித்து விட்டால் பாரம் குறையும்.

பந்துக்களுக்குப் பொருளுதவி செய்வதும், வேலை பார்த்துக் கொடுப்பதும், நைமித்திகக் கடமையென்று கூறலாம். இதற்கு எல்லையுமில்லை, திருப்தியுமில்லை. ஒருவனுக்கு ஏதாவது செல்வாக்கோ, அதிகாரமோ இருந்தால், உடனே அதை எப்படியாவது உபயோகப்படுத்தி உதவவேண்டுமென்று பந்துக்கள் வற்புறுத்துகின்றனர். அப்படிச் செய்யாவிட்டால் மனஸ்தாபம்; செய்தால் சமூக வாழ்வு சீர்கெட்டு விடுகின்றது. ஏதோ ஒரு பரீக்ஷை வைத்தோ, சீட்டுப்போட்டுக் குலுக்கியோ உத்தியோகங்கள் கொடுக்கப்பட்டால், இந்த தொல்லை தீரும். பரீக்ஷையில் என்ன பிரயோசனம், உத்தியோகத்திற்குத் தகுந்த சாமர்த்தியமுள்ளவர்களை மேலதிகாரிகள் நியமனம் செய்யவேண்டும் என்போர்கள் பந்துக்களின் நிர்ப்பந்தத்தை அறியாதவர்களாக விருக்கவேண்

டும். அல்லது தம் பந்துக்களுக்குச் சிபார்சின்பேரில் உத்தியோகம் செய்து வைக்க விரும்புகிறவர்களாக விருக்கவேண்டும்.

பந்துக்களுக்குள் எவ்வித சம்பந்தம் இருக்கவேண்டுமென்று எளிதில் கூறிவிடலாம். ஒருவன் தன் சொந்தக்காரர்களிடமிருந்து எதையும் எதிர்பார்க்கக்கூடாது. எதையும் யாசிக்கலாகாது. ஆனால் தன்னால் கூடியவரையில் தன் பந்துக்களுக்கு உதவி செய்ய வேண்டும். இந்த நியாயத்தை அனுஷ்டிப்பது அவ்வளவு சுலப மன்று. பந்துக்களின் பேரில் குற்றம் சொல்வது கிரகஸ்தர்களின் சாதாரண தர்மமாகப் பாவிக்கப்பட்டு வருகின்றது. தான் செய்த அல்ப உதவியைப் பறை சாற்ருமலிருப்பதும் கஷ்டமானது.

### வானப்பிரஸ்தாச்ரமம்

ஒவ்வொருவனும் கிரகஸ்தாசிரமத்தைச் சிலகாலம் அனுப விந்துவிட்டு வானப்பிரஸ்தாசிரமத்தை மேற்கொள்ள வேண்டு மென்று ஹிந்துமதம் உபதேசிக்கிறது. இந்த நியமம் பரலோகத் திற்கு உதவுமாவென்று பதில் சந்தேகம் இருக்கலாம். அது இந்த உலக வாழ்க்கையைப் பூர்த்தி செய்வதற்கு அவசியம் என்பதில் ஐயமில்லை. குடும்பக்கவலைகளிலிருந்து விடுபட்டு, சுதந்திரமாக உலக நாடகத்தைச் சாக்ஷியாகத் தரிசித்து மகிழ்ச்சியடையாமல் இறக்கும் புருஷன் தன் வாழ்க்கையின் முக்கிய இன்பத்தையே இழந்து விட்டான் என்று சொல்வது மிகையாகாது.

இந்த நாட்களில் வீட்டை விட்டுப் போவதற்குக் காடுகளில் லையே என்று கஷ்டப்படவேண்டாம். சொத்தையும் வருமானத்தை யும் துறந்துவிட்டால், கிராமமும் காடுபோல் ஏகாந்தமாகிவிடும். தோப்பிலேயோ ஆற்றங்கரையிலேயோ குடிசை கட்டிக்கொண்டு ரிஷிபோல் வாழலாம். வேடிக்கை பார்க்கும் குழந்தைகளும், தனி மையில் துக்கப்படுவோரும், தர்மத்தைத் தேடுவோருமே அங்கு வருவார்கள். பொதுஜன சேவையும் தானே தேடிவரும்.

இவ்வளவு அழகான ஆசிரமதருமத்தை ஏற்றுக்கொண்ட ஹிந்து சமூகத்தின் கதியைச் சிந்தித்து ஆச்சரியமும், துக்கமும் அடையாமலிருக்க முடியாது. பால்ய விவாகம் செய்து பிரமசரிய ஆச்ரமம் விடப்பட்டது. உயிர் துறக்கும் வரையில் பிள்ளை, பெண், பேரன், பேத்தி இவர்களின் விவாகத்தைப்பற்றியே சிந்தனை. பிறந்தது முதல் சாகும்வரையில் குடும்பத்தைக் கொடிய சிறை யாகச் செய்துவிட்டார்கள். சட்டப்படி ஜன்ம தண்டனை விதிக் கப்பட்டாலும், பதினன்கு வருஷ முடிவில் விடுதலையுண்டு. ஹிந்து சமூகத்தில் பிறந்துவிட்டால் சிறிதும் விடுதலையே கிடையாது. இந்து சமூகம் க்ஷீணித்ததற்கும் அடிமைப்பட்டதற்கும் அதன் குடும்ப பாரமே முக்கிய காரணம். இருபது வயதிற்குள் ஆணும், பதினறு வயதிற்குள் பெண்ணும் குடும்பமாகிய செக்கை ஆட்ட வேண்டுமானல், அந்தச் சமூகத்தில் வீரர்களும், விஞ்ஞானிகளும் யாத்திரிகர்களும் எவ்வாறு உதிக்க முடியும்?

ஸ்தல ஸ்தாபனங்கள் கூட்டுறவுச் சங்கங்கள் முதலிய இயக் கங்களை உத்தியோகப் பற்றற்றவர்கள் நடத்தவேண்டுமென்று அவைகளைக் கஷ்டப்படும் குடும்பிகளிடம் கொடுத்துவிடுவதன் பலனை நாம் அனுபவிக்கிருேம். நேரில் சம்பளம் பெறுவோர்களை

ஒருவாறு நம்பலாம். சமூக நலத்தையே நாடிச் சேவை செய்வோர்களையும் நம்பலாம். இரண்டிலும் சேராமல் ஓயாமல் பணமுடையாலும், குடும்பக்கவலையாலும் வருந்துகின்றவர்களை ஊதியமின்றி வேலை செய்யச் சொல்வதால் பெரிய தீமைகள் ஏற்படுகின்றன. பண ஊதியத்திற்குப் பதிலாகத் தம் பதவியையும், செல்வாக்கையும் கெட்டவழியில் உபயோகப்படுத்தி குடும்ப யோகக்ஷேமத்தைக்கவனிப்பது சாதாரணமாகவிருப்பதில் ஆச்சரியமில்லை. குடும்பப் பற்றை அறுத்த முதியோர் பலர் இருக்கும் சமூகங்களில் தான் சுயநலமற்ற பொதுசேவை ஓங்கி வளரமுடியும்.

குடும்பத்தில் காதலும், சுகமும் அதிர்ஷ்டத்தைப் பொறுத்திருக்கிறது. கடமையும் கஷ்டமும் நிச்சயம். குழந்தைகளை வளர்ப்பதுதான் முக்கிய பிரயோசனம். அதன் பற்றை நாளடைவில் குறைத்துக் கடைசியில் அறவே அறுத்துச் சமூக சேவை செய்பவனே ஞானியும், கர்மயோகியுமாவான்.

# அத்தியாயம் 3

## ஜாதி

ஜாதி அபிமானமில்லாத மனிதன் இல்லை. ஆனால் 'ஜாதி' யென்றால் என்னவென்று நிச்சயமாகச் சொல்லமுடியாது. வெவ்வேறு சமயத்தில் வெவ்வேறு அர்த்தத்தில் இப்பதம் உபயோகப்படுத்தப்படுகிறது.

ஒரு சமூகத்தின் ரத்த பரம்பரையை இப்பதம் குறிக்கிறது என்பார் சிலர். எல்லா ரத்தமும் சிவப்பாகத்தான் இருக்கிறது என்று இவைகளை நிராகரித்துவிட முடியாது. நிறம், உயரம், தோற்றம் முதலிய அம்சங்களில் பல வித்தியாசங்கள் இந்த ரத்த பரம்பரையால் உண்டாகின்றன. வெள்ளை நிறமும் நீண்ட தேகமும் அகன்ற நெற்றியும் கூரிய மூக்கும் ஆரியர்களின் அம்சங்கள் என்று சொல்லப்படுகின்றன. மஞ்சள் வர்ணமும், சப்பை மூக்கும், சிறிய தேகமும் மங்கோலிய ஜாதியின் சின்னங்கள். நல்ல கறுப்பு நிறமும், தடித்த உதடுகளும் குறுகிய நெற்றியும் நீக்ரோ ஜாதி அடையாளங்கள். இந்த ஜாதிகள் சிற்சில இடங்களில் சுத்தமாகவும் பூமியில் பெரும்பாலான பாகங்களில் கலந்துமிருக்கின்றன.

இவ்வித்தியாசங்களைப் பொருட்படுத்தாமல், எல்லோரும் ஒரே சுபாவமுள்ள மனிதர்களாகக் கருதப்பட்டு மானிட வர்க்கமே ஒரு அவிபக்த குடும்பமாவது நமது லக்ஷியமாக வேண்டுமென்று சில தீர்க்கதரிசிகள் போதிக்கின்றனர். இது முற்றிலும் தவறு; வெளித் தோற்றங்களுடன் பல மனோ ஆத்ம சக்திகளும் கலந்திருக்கின்றன! தம் ஜாதியைச் சுத்தமாகப் பாதுகாத்துக் கொள்வதே சமூகத்தின் முக்கிய கொள்கையாக இருக்கவேண்டுமென்று இன்னொரு சாராரின் உபதேசம், மனித வாழ்க்கையோ இரண்டிற்கும் நடுவில், சிலவேளைகளில் ஒரு பக்கம் அதிகமாகச் சாய்ந்தும், வேறு வேளைகளில் மற்ற வாதத்தை ஏற்றுக்கொண்டும் நடைபெற்று வருகிறது.

### நிற வித்தியாசம்

நிற வித்தியாசத்தை அதிகமாகப் பாராட்டக் கூடாதென்று சொல்வது மிகச் சுலபம். தனி மனிதன் அவ்வாறு இருந்துவிடலாம். ஆனால் சமூகங்களில் இந்த வித்தியாசம் முக்கியமானதாகவே இருந்துவரும். வெள்ளைக்காரர்கள் ராஜ்யாதிகாரத்திலும், செல்வத்திலும் தற்காலத்தில் ஓங்கியிருப்பதால் மற்ற வர்ணக்காரர்களைத் தாழ்ந்தவர்களாக நினைக்கிறார்கள். சில கறுப்பு, மஞ்சள் மனிதர்கள் வெளுப்பு நிறத்தைச் சிரேஷ்டமாகக் கருதுகிறார்கள். இந்த வித்தியாசங்கள் இல்லாவிட்டாலும், நிறப் பற்று இராதென்று எண்ணுவது தவறாகும். நிற வித்தியாசங்களோடு மற்ற குண வித்தியாசங்கள் எவ்விதம் சேர்ந்திருக்கின்றனவென்று இன்னும் நிர்ணயமாகவில்லை.

இந்த அறிவு நிச்சயமாகவும் பூர்ணமாகவும் கிடைக்கும் வரையில் சமூகங்கள் தம்தம் நிறத்தையும் அதனோடு சேரும் ஜாதி வித்தியாசங்களையும் பாதுகாப்பது நலமென்று நினைப்பதில் தவறொன்றுமில்லை. பசுமாடுகளையும், குதிரைகளையும் மற்ற மிருகங்களையும் ஜாதிக்குழப்பமின்றி பாதுகாப்பது மிகவும் உயர்ந்த கொள்கையாகக் கருதப்படும்பொழுது மனிதர்களுக்கு மட்டும் இது அவசியமில்லை என்று கூறுவது விபரீதமாகின்றது.

### வாழ்க்கை முறை

ஆனால் பல தேசங்களில் குழப்பம் வெகு நாளாக ஏற்பட்டுக் கலப்பு ஜாதிகளே பெரும்பாலாகிவிட்டன. எல்லோரும் ஏறக்குறைய ஒரே நிறமும், தோற்றமும் பெற்றிருந்த போதும், பழக்கங்களைக்கொண்டு ஜாதி வித்தியாசம் கொண்டாடுகின்றனர். விவாகம், உணவு, உடை, பாஷை இந்நான்கும் இதற்கு முக்கிய காரணங்கள். ஒரு சமூகத்தில் எல்லா குடும்பங்களும் தங்களுக்குள் விவாக பந்தம் செய்து கொள்ளவும், தாராளமாக ஒருவர் வீட்டில் மற்றொருவர் சாப்பிடவும், ஒரேவித உடை தரிக்கவும், ஒரே பாஷை பேசவும் பழகிவிட்டால் அதன் கட்டுப்பாடு பெருகி ஜாதி என்ற பெயருக்கு உரிமை பெற்றுவிடுகிறது. இந்த நான்கில் ஒன்று குறைந்தாலும் அதன் கட்டுப்பாடு குலைந்து பல சமூகங்களாகப் பிரிந்துவிடும்.

### வர்ணாசிரமம்

ஹிந்து சமூகம் பல்லாயிர வருஷங்களாக ஜாதிக்கலப்பின் ஆராய்ச்சிக் கூடமாக இருந்து வருகிறது. வர்ணாசிரம தர்மம் ஆதியில் எப்படி ஏற்பட்டது என்று நிர்ணயிப்பதற்குப் போதிய ஆதாரங்கள் இல்லை. தொழிலின் பேரில்தான் ஸ்தாபிக்கப்பட்டது என்று சிலர் கூறுகின்றனர். ஆனால் விவாகத்திற்கு ஏன் பிரமாதமான முக்கியத்துவம் கொடுத்திருக்கவேண்டுமென்று புரியவில்லை. நிறத்தின் பேரில் ஸ்தாபிக்கப்பட்டிருக்கிறதென்றும் கூற முடியாது. இமாலயத்திலிருந்து கன்னியாகுமரி வரையில் இந்தியர் சாதாரணமாக ஒரே நிறமாக இருப்பது, இதற்கு நேர் விரோதமான சாக்ஷி சொல்லுகிறது. எப்படியிருக்கக்கூடுமென்றால் முதலில் வந்த ஆரியர்கள் எண்ணிக்கையில் மிகவும் குறைவாக இருந்தமையால், இந்தியாவின் பழைய ஜாதிகளோடு தாராளமாக விவா

கம் செய்து கொண்டிருக்கவேண்டும். பிற்பாடு வந்தவர்கள், இக்கலப்பைக் குறைக்கும்பொருட்டு நியமங்கள் செய்ப முயற்சி செய்து, நிறம் தொழில் இரண்டையும் வைத்து வர்ணாச்ரமத்தை நாளடைவில் நியமித்திருக்க வேண்டும். நீண்டகாலம் ஒரு ஜாதியிலிருந்து மற்ற ஜாதிக்குத் தொழில் மூலமாகவும், விவாகமூலமாகவும் போவது சகஜமாக இருந்திருக்கவேண்டும். அதைத் தடுப்பதற்குப் பிற்காலத்தில் தர்ம கர்த்தர்கள் விவாகத்தில் மட்டுமன்றி, ஆகாரம், முதலிய வேறு பலவித விஷயங்களில் நியமங்கள் ஏற்படுத்தி, ஜாதி வித்தியாசங்களை நிலை நிறுத்த முயன்றிருக்கிறார்கள் என்று தோன்றுகிறது. இதன் பலனாக பாஷைகளால் பிரிக்கப்பட்ட சமூகங்கள், விவாகத்தாலும், உணவாலும் மறுபடியும் சின்ன பின்னப்பட்டு, நூறு குடும்பங்கள், ஆயிரம் குடும்பங்கள், பதினாயிரம் குடும்பங்கள் கொண்ட ஜாதிகளாகிவிட்டன. பிறப்பும், விவாகமும் ஜாதியை நிர்ணயிக்கும் வரம்புகளாகிவிட்டன.

இந்த வரம்புகள் இக்காலத்தில் நீக்கப்பட்டு மறுபடியும் சிறிய ஜாதிகள் ஒன்று சேர்ந்து பெரிய ஜாதிகளாவதை இப்பொழுது காண்கிறோம். உணவு சம்பந்தமான நியமங்கள் தளர்ந்துவிட்டன. விவாக நியமங்களும் தளரவாரம்பித்துவிட்டன. ஆனால் பாஷைப்பற்று அதிகரித்துவருகிறது. இந்தியர் அனைவரும் ஒரே ஜாதியாரென்று சொல்வது மேடைப்பிரசங்கங்களில் வழக்கமாயிருப்பினும், இந்த நாடு முழுவதும் ஒரே ராஜ்யமாக இருக்க வேண்டுமென்று அறிஞர்கள் விரும்பியபோதிலும், பாஷைவாரியாக ஜாதிப்பற்று பெருகிக்கொண்டு வருகின்றது. இதைக்கண்டு சிலர் பயப்படுகின்றனர். ஆனால் பழைய அனாவசிய ஜாதி வித்தியாசங்கள் மறைவதற்கு வேறுவழியில்லை என்று தோன்றுகிறது. ஒரு பாஷை பேசும் சமூகத்தார் மற்றோர் பாஷை பேசும் சமூகத்தாரோடு தாராளமாக விவாகம் செய்து கொள்ளுவது சாத்தியமில்லை. ஆதலால் தனி பஷைகளெல்லாம் மறைந்து இந்தியா முழுவதும் ஒரே பாஷையாகும் வரையில், பிரதேச பாஷைகளைக் கொண்டே கட்டுப்பாடான சமூகங்கள் அமைக்கவேண்டும். இல்லாவிட்டால் சில்லறை ஜாதி வித்தியாசங்கள் மறையமாட்டா.

## மதமும் ஜாதியும்

மத வித்தியாசங்கள் சிலவிடங்களில் ஜாதி வித்தியாசங்களைக் குறைத்தும் மற்றவிடங்களில் அவைகளை அதிகப்படுத்தியும் இருக்கின்றன. இஸ்லாம் இதற்கு நல்ல உதாரணம். அதைச் சேர்ந்தவர்கள் முதலில் எந்த ஜாதியைச் சேர்ந்திருந்தாலும் ஒரே ஜாதியைச் சேர்ந்தவர்கள் போல் உணர்ச்சியுள்ளவர்களாக இருக்கிறார்கள். எல்லா முஸ்லீம்களும் கடவுள் முன்னிலையில் சமானமானவர்கள். முஸ்லீம்களுக்குள் பரஸ்பர விவாகம், போஜனம் முதலிய சமூக பழக்க வழக்கங்களும் பரவி வந்தது. ஆனால் இக்கட்டுப்பாடு சமீப காலங்களில் குறைந்து வருகிறது. துருக்கியர், அராபியர் என்ற ஜாதி வித்தியாசங்கள் பெருகிவருகின்றன. ஒரே பாஷை ஏற்படாததே இதற்கு முக்கிய காரணமென்று தோன்றுகிறது.

கிறிஸ்துவ மதம் இஸ்லாமிய மதத்தைப்போலவே எல்லோரையும் சரி சமமாகப் பாவித்த போதிலும், ஜாதி வித்தியாசங்களைத் தீர்ப்பதில் அவ்வளவு சக்தி பெறவில்லை. யூதர்கள் ஆதி ஐரோப்

பிய கிருஸ்தவர்களுடன் சேராதது ஒரு முக்கியகாரணம். வெள்ளைக்காரப் பாதிரிகள் வேறு நிறத்தார்களிடம் மதப் பிரசாரம் செய்த பொழுது, உலக விவகாரங்களுக்கு ஜாதி வித்தியாசங்களை ஏற்றுக்கொண்டு மதக் கொள்கைகளில் மட்டும் மனித சமத்துவத்தை போதித்தார்கள். வெள்ளைக்காரர்கள் உயர்வை மற்றவர்கள் ஒப்புக்கொள்ளும் வரையில், இந்தச் சாமர்த்தியம் பலித்து வந்தது. ஆனால் இக்காலத்தில் இவ்வுலக சமத்துவத்தை ஒப்புக் கொள்ளாத எந்த பரலோக சமத்துவமும் பிரயோசனமில்லை.

ஜாதியும், மதமும், ஆதிமுதல் சேர்ந்து வந்ததற்கு ஹிந்து சமூகம் ஒரு பெரிய உதாரணம். அதில் எது ஜாதி சம்பிரதாயம், எது மதக்கொள்கையென்று பிரிக்கமுடியாது. புத்த, ஜைன மதங்கள் இவ்விரண்டையும் வெவ்வேருகப் பிரிக்கப் பார்த்தன. ஆனால் முடியவில்லை.

## ஜாதிப் பிரச்னை

ஜாதிப் பிரச்னைக்கு இரண்டு அம்சங்களுண்டு. ஒரே பிரதேசத்தில் இரண்டு அல்லது அதிகமான பிரஜைகள் வசித்தால் அவைகளுக்குள் பரஸ்பரம் எப்படி நடந்து கொள்ளவேண்டும்? வெவ்வேறு பிரதேசங்களிலுள்ள ஜாதிகளின் பரஸ்பர சம்பந்தம் எவ்வாறு இருக்கவேண்டும்?

ஒரே பிரதேசத்திலுள்ள அனைவரும் ராஜ்யம், பொருளாதாரம் இரண்டிலும் சேர்ந்து வாழவேண்டிய அவசியமிருக்கின்றது. இவற்றில் தம் ஜாதி அபிமானங்களைப் புகுத்தினல் மனஸ்தாபமும் சண்டையும் ஏற்படாமல் இராது. ஜாதி வித்தியாசங்களைப் பொருளாதாரத்திலும், அரசியலிலும் பாராட்டலாகாதென்பது சாத்தியமில்லை. பணமும், அதிகாரமும் இவ்வுலக வாழ்க்கையில் விரும்பக்கூடிய லக்ஷியங்களில் முக்கியமானவை. பணக்கார ஜாதியில் பிறப்போர்கள் ஏழையாக இருப்பினும் அவர்களுக்குக் கல்வி, தொழில் முதலியவற்றில் விசேஷ செளகரியங்கள் கிடைக்கின்றன. அரசியலில் அதிகாரமுள்ள ஜாதியார்களுக்கு உத்தியோகங்களும், செல்வாக்கும் கிடைக்கின்றன.

இந்த ஜாதிவித்தியாசங்களையெல்லாம் ஒழித்து ஒரே ஜாதியாக்கி விடுவதே இப்பிரச்னையைத் தீர்ப்பதற்கு நல்ல வழியாகும். தேச பக்தியையும் பாஷாபிமானத்தையும் வளர்த்து ஜாதிச் சின்னங்களையும், தனிப் பழக்க வழக்கங்களையும் குறைப்பதில் தீர்க்க தரிசனத்தோடு நீண்டகாலமுறைகளைக் கையாளவேண்டும். அவை பலனளிக்கும் வரையில், தனித் தனியாக ஜாதிகளுக்கு அரசியலிலும், பொருளாதாரத்திலும் பங்கு கொடுப்பதே நியாயமாகும். நீண்டகால முறைகளுக்கும், தற்காலிக ஏற்பாடுகளுக்கும் முரண்பாடு இருக்கக்கூடாது. உதாரணமாக, சட்ட சபைகளில் ஜாதி வாரிப் பிரதிநிதித்துவம் கொடுத்துவிட்டால் ஜாதிப் பிரிவினைகள் பலப்படுகின்றன. முற்றிலும் கொடுக்காவிட்டாலும் சில ஜாதியார்களிடமே ராஜ்யாதிகாரம் சேர்ந்துவிடக்கூடும். இரண்டிற்கும் மத்தியில் பாதிப் பிரதிநிதித்துவம் ஜாதி வாரியாகவும், பாதி பொதுவாகவும் கொடுக்கப்பட்டு, நாளடைவில் ஜாதிப் பிரதிநித்துவம் குறைந்து, பொதுப் பிரதிநித்துவம் அதிகரித்து வந்தால் ஜாதி வித்தியாசங்கள் குறைவது சுலபமாகும்.

இவ்வாறு செய்வதற்கு ஒரு பெரிய தடை இருக்கின்றது. ஜாதி பிறப்பினலேயே நிர்ணயிக்கப்படுகிறது. ஆதலால் ஒருவன் தன் வாழ்க்கையால் ஜாதியை மாற்றிக்கொள்ள முடியாமல் இருக்கின்றது. பிறப்பைத் தவிர, பாஷை, விவாகம், முதலியவற்றை ஜாதிச் சின்னங்களாகக் கொண்டு இவற்றில் ஏதாவது இரண்டு, மூன்று அம்சங்கள் உள்ளவர்களை ஒரு ஜாதியென்று வகுப்பது வழக்கமாக வேண்டும். 'ஜாதி' என்னும் பதத்திற்குச் சட்டபூர்வமாக அர்த்தம் கொடுத்து, ஒரு பிரதேசத்திலுள்ள அனைவரும் ஒரே ஜாதியாகத் தம்மை நினைக்க வழி தேடுவதே நம் நாட்டிற்கு முக்கியமாகும்.

வெவ்வேறு பிரதேசங்களில் குடியிருக்கும் ஜாதிகள் தம் தம் பொருளாதாரத்தையும் ராஜ்ய பாரத்தையும் தாமே நிர்வகிக்க வேண்டும். அவைகளுக்குப் பொதுவான மத்திய அரசாங்க ஏற்பாடுகள் வேண்டுமாவென்பது பிரதேசங்களின் இயற்கை அமைப்பைப் பொறுத்தது. ஒரு தீவில் இருப்பவர்கள் மற்றவர்களோடு சேர அவசியமில்லை. ஆனல் இந்தியாவைப் போன்ற பெரிய தேசத்தில் இருக்கும் ஜாதியார்களெல்லாம் சேர்ந்து மத்திய அரசாங்கம் அமைக்காமற்போனல் எல்லோரும் கஷ்டப்பட வேண்டிவரும். அவ்வாறு மத்திய அரசாங்கம் ஏற்படுத்துவதில் எல்லா ஜாதிகளையும் ஒன்ருக்குவதே நோக்கமாயின் மத்திய அரசாங்கத்தாருக்கு அதிக அதிகாரம் கொடுத்து, பொது பாஷையை விருத்தி செய்யவேண்டும். ஜாதி சுதந்திரமே முக்கியமாகக் கருதப்படின், மத்திய அரசாங்கத்தின் அதிகாரம் கூடிய வரையில் குறைக்கப்பட வேண்டும்.

### மூன்று உதாரணங்கள்

ஜாதிப் பிரச்னையைத் தீர்ப்பதற்கு ஜெர்மனி, ருஷ்யா, அமெரிக்க ஐக்கிய நாடுகள் இம்மூன்றிலும் மூன்றுவித பரீக்ஷைகள் செய்யப்பட்டு வருகின்றன. ஜெர்மனியில் ஹிட்லர், ஜாதி தான் சமூகத்தின் முக்யாம்சமென்றும் உலகில் ஆரிய ஜாதியே மேலான ஜாதியெனறும், ஜெர்மானியரே ஆரிய ரத்தத்தைச் சரியாகப் பரிபாலித்திருக்கிருர்களென்றும் அவர்களே ஐரோப்பாவிற்கும், முடிவில் உலகத்திற்கும் தலைமை ஜாதியாவார்களென்றும் தம் புத்தகத்தில் எழுதியிருக்கிருர். தான் அதிகாரத்திற்கு வந்த பிறகு இக்கொள்கையைப் பல விதங்களில் அமுல் செய்திருக்கிருர்கள். யூதர்கள் பலாத்காரமாக ஜெர்மனியை விட்டுத் துரத்தப்பட்டார்கள். ஜெர்மானியர் வேறு ஜாதியாரோடு விவாகம் செய்து கொள்ளலாகாது. வாலிபப் பருவத்தில் மணந்து ஜெர்மானியரின் சங்கியை அதிகரிக்கவேண்டும். வியாதியுள்ளவர்கள் பலாத்காரமாக நபும்ஸகர்களாகச் செய்யப்படுகின்றனர். இம்மாதிரி முரட்டுத்தனமாக நடந்து ஜெர்மன் ஜாதியைப் பரிசுத்தப்படுத்துவதின் பலன்கள் பல நூற்ருண்டுகளுக்கு ஜெர்மானியாரின் உயர்வைக் காக்கும் என்கிருர். பிற்காலத்தில் ஜெர்மானியரின் சங்கியை அதிகரிக்குமாதலால் அவர்கள் வாசம் செய்வதற்காகப் போலந்து, பொஹீமியா முதலிய பிரதேசங்களிலிருந்து இப்பொழுதே வேறு ஜாதிகளை அப்புறப்படுத்த முயற்சிசெய்து வருகிருர். எப்படி ஒரு நாட்டில் நல்ல ஜாதி மாட்டையோ, குதிரையையோ வளர்க்க விரும்பி ஈனஜாதி மாடுகளையும், குதிரைகளையும் கொன்றுவிட

யோசனை செய்யக்கூடுமோ, அப்படியே மனிதரும் ஒரு விதப் பிராணிகளாகவே கருதப்படுகின்றனர்.

ருஷ்யாவில் இதற்கு நேர்விரோதமான பரிக்ஷை செய்யப்பட்டு வருகின்றது. மனிதர்களிடம் பொருளாதாரம் தான் முக்கியம். புத்தியிலும், மற்ற சக்திகளிலும் வித்தியாசமிருப்பது பிறப்பினுலல்ல, பொருளாதார ஏற்பாட்டாலும் அதனை ஒட்டிய கல்வி முதலிய சௌகரியங்களாலும், நிறம்; தோற்றம் முதலிய வித்தியாசங்களைப் பொருட்படுத்துவது மனிதனுக்கு அழகல்ல. பொதுவுடைமைச் சமுதாயம் ஏற்படுத்தி எல்லோருக்கும் ஒரேகல்வி, ஒரே உணவு, ஒரே சம்பிரதாயம் ஏற்பட்டால் எல்லா மனிதர்களும் ஒரே ஜாதியாய் விடுவார்கள். இக்கொள்கைகளை அனுசரித்து சோவியத் ருஷ்யாவில் பல ஜாதிகள் பரஸ்பரமாகச் சேர்ந்து வசிப்பதற்குத் தடையாக இருந்த சட்டங்கள், பழக்க வழக்கங்கள் முதலியவைகளை அகற்றுகின்றனர். ஆனால் பாஷையில் மட்டும் பிரதேசங்களுக்குச் சுதந்திரம் அளிக்கப்பட்டிருக்கிறது.

சென்ற பதினைந்து வருஷங்களில் சோவியத் ருஷ்யாவிலுள்ள பல பிற்போக்கான ஜாதிகள் முன்னேறியிருக்கின்றன. எழுதப் படிக்கத் தெரியாதவர்களே இல்லை. எல்லோரும் இயந்திரங்களை ஓட்டுவதில் சாமர்த்தியம் பெற்றுவருகின்றனர். ஆனால் எல்லோரும் ஒரே ஜாதியாகி வருகின்றார்களென்று சொல்லமுடியாது. பாஷையை அடிப்படையாகக் கொண்டே ஜாதி வித்தியாசங்கள் ஓர் புறம் வளர்ந்து வருவதாகவும் தோன்றுகிறது.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் எல்லா வெள்ளை ஜாதியார்களுமிருக்கின்றனர். ஒரு கோடி நீக்ரோ ஜாதியார்களுமிருக்கின்றனர். இதர நிறத்தார்களுமிருக்கின்றனர். இவர்களுக்கெல்லாம் பொதுவாக இருப்பது ஆங்கிலபாஷை, குடியரசு. எல்லோரும் வித்தியாசமின்றி ஒரே ஜாதியாராக இருக்கவேண்டுமென்ற லக்ஷியம் போதிக்கப்படவில்லை. வெள்ளை நிறத்தார்கள் நீக்ரோக்களோடு கலக்கலாகாதென்ற தீவிர உணர்ச்சியிருந்து வருகிறது. ஜாதி விஷயங்களில் அவரவர் வழக்கப்படி இருப்பினும் ராஜ்யம், பொருளாதாரம் முதலிய பொதுக் காரியங்களில் எல்லோரும் சமமாக விருந்து சௌக்கியமாக வாழக்கூடும் என்னும் கொள்கையின் பேரில் இந்தச் சமுதாயம் நடைபெற்று வருகிறது.

ஒரு பொது பாஷையின் சக்தியால் பழக்க வழக்கங்களில் ஏறக்குறைய சமமாயிருக்கும் ஐரோப்பிய ஜாதியினர் நாளடைவில் ஒரே ஜாதியாகி விடக்கூடும். ஆனால், வருங்காலத்தில் நீக்ரோ ஜாதியாரின் கதி என்னவாகும் என்று சொல்வதற்கில்லை. ஒரு பெரிய செழிப்பான பூகண்டத்தில் ஜனத்தொகை குறைவாக இருப்பதாலும், இதுவரையில் நீக்ரோ ஜாதியார் ஈன சேவைகளுக்கு மிகவும் உபயோகமாக இருந்ததாலும் ஜாதிப் பிரச்னை முற்றவில்லை. ஜனத்தொகை அதிகரித்தால் அது நிச்சயம் மேலெழும் என்பதில் சந்தேகமில்லை.

## முடிவு

ஜாதிக்கு நிறமும், பாஷையுமே நித்தியக் குறிகள். மற்றவை எளிதில் மாறக்கூடியவை. ஒவ்வொரு பிரதேசத்திலும் இருக்கும் ஜனங்கள் ஒரே ஜாதியாராகத் தம்மைக் கருதினால் ஸ்திரமான

சமூக வாழ்க்கை ஏற்படும். பல ஜாதிகள் கொண்ட சமூகங்கள் பலஹீனமாகவேயிருக்கும்.

### தேசம்

ஒரு பிரதேசம் எப்பொழுது தேசமாகின்றது? இக்கேள்விக்கு பதில் கூறுவது சுலபமல்ல. முற்காலங்களில் சிறிய பிரதேசங்களே தேசங்களாகக் கருதப்பட்டன. இப்பொழுது கிரீஸ் தேசத்தை மிகவும் சிறிய தேசமென்கிறோம். இரண்டாயிர வருஷங்களுக்கு முன் இது பல தேசங்களாகவிருந்தது. ஏதென்ஸ், ஸ்பார்ட்டா முதலிய நகரங்களைச் சுற்றிலுமுள்ள பிரதேசங்கள் மிகவும் நாகரிகமுள்ள தேசங்களாகவிருந்தன. அதற்கு அடையாளமாக ஓயாமல் சண்டை செய்து கொண்டிருந்தன. இந்தியாவில் ஐம்பத்தாறு தேசங்கள் இருந்தனவென்று பழங்கதைகள் கூறுகின்றன. பிரிட்டிஷ் சாம்ராஜ்யத்தின் கீழே அறுநூறு சுதேச சமஸ்தானங்கள் இருக்கின்றன. ஆதலால் பண்டைக் காலத்தில் இங்கே ஆயிரம் தேசங்கள்கூட இருந்திருக்கலாம்.

சிறிய தீவுகளையும் வெளிப் போக்குவரத்துக்குக் கஷ்டமான மலைப் பிரதேசங்களையுமே இயற்கையால் செய்யப்பட்ட தேசங்கள் எனலாம். இக் காரணத்தால் ஜப்பான், இங்கிலாந்து, சுவிட்சர்லாந்து முதலிய தேசங்களில் தேசபக்தி மிகுந்திருக்கின்றது. எவ்வளவு பெரிய ஹோட்டலாகவிருந்தபோதிலும், அதில் ஒருவன் வெகுகாலம் வசித்தபோதிலும், ஒரு குடியானவனுக்குக் குடிசை மீதுள்ள பற்று அவனுக்கு அதன்மீது ஏற்படுவதில்லை. அவ்வாறே பெரிய பிரதேசங்களின் மீது தேசபக்தி எளிதில் உண்டாகாது.

இயற்கையாக தேசமாகாத பிரதேசத்தை, பாஷை நாடாக்குகிறது. ஆனால் ஒரு பாஷை பேசும் பிரதேசமெல்லாம் ஒரு தேசமாகக் கருதப்படவேண்டுமென்ற நியமம் இல்லை. தமிழ்நாடு பாண்டியர், சோழர், சேரர் தேசங்களாகப் பிரிவுபட்டிருந்தது. பாஷையோடு ராஜ்யமும் சேர்ந்தால் அது நிச்சயமான தேசமாகின்றது. ஏனெனில் ராஜபக்தியும் பாஷாபிமானமும் சேர்ந்து அப்பிரதேசங்களின்பேரில் பிரஜைகளுக்கு அதிகப் பற்று ஏற்படுகிறது. பல பாஷைகளுள்ள ஒரு பெரிய பிரதேசத்தில் ஒரு ராஜ்யம் வெகுகாலம் ஸ்திரமாகவிருப்பின் அதனால் ஏற்படும் பொருளாதார நாகரீக ஒற்றுமைகளால் அது ஒரு தேசமாக எண்ணப்பட்டு அதனிடையே பக்தியும் பிறக்கிறது.

தேசம் பலவகைகளில் அமைக்கப்பெறுவதால், தேசபக்தியின் தன்மையும் பலவாறாகவிருக்கும். சில தேசத்தார்கள் தங்கள் ராஜ்ய சுதந்திரத்திற்காக உயிரைக் கொடுப்பார்கள். மற்றவர்கள் தங்கள் பாஷைக்காகவும், ஜாதிக் கட்டுப்பாடுகளுக்காகவும் தியாகம் செய்யத் தயாராயிருப்பார்கள்.

மதப்பற்று அதிகமாக இருப்பவர்களிடம் தேசபக்தி குறைவாகவேயிருக்கும். தங்கள் மதத்திற்காக தேசத் துரோகம் செய்வது தீங்கென்று நினைக்கமாட்டார்கள். தேசபக்தியை வளர்க்க விரும்புவோர் மதப்பற்றைக் குறைக்க முயற்சி செய்வார்கள். ரோமன், காதலிக் மதத்தை எதிர்த்து மதத்தையும் ஒரு தேசிய ஸ்தாபனமாகச் செய்தபிறகே இங்கிலாந்தில் தேச பக்தி

உயர்ந்தது. இதே காரணத்தால் கமால் பாஷா, ஹிட்லர் முதலியோரும் தம் நாட்டினரின் மதப்பற்றை பலாத்காரமாக மாற்ற முயற்சித்திருக்கின்றனர்.

### தேசமும் பொருளாதாரமும்

பண்டைக்காலங்களில் பொருளாதாரப் பிரச்னைகள் பெரும்பாலும் சுலபமாகவேயிருந்தன. எந்நாட்டிலும் நூற்றில் தொண்ணூறு குடும்பங்கள் விவசாயம் செய்தோ ஆடுமாடுகளை வைத்தோ ஜீவனம் செய்துவந்தன. வியாபாரத்தாலும், ராஜ்யாதிகாரத்தாலும் பிழைப்பவர்களின் எண்ணிக்கை மிகவும் சொல்பமாகவிருந்தது. ஆதலால் ஜாதி, பாஷை, மத உணர்ச்சிகளே சமூகங்களையும் ராஜ்யங்களையும் நடத்தும் சக்திகளாகவிருந்தன. ஆனால் இப்பொழுது இந்நிலைமை முற்றிலும்மாறிவிட்டது. நீராவி, எண்ணெய், மின்சாரம் முதலியவற்றால் நடத்தப்படும் யந்திரங்களும், போக்குவரத்து சாதனங்களும் மிகுந்து விஞ்ஞான ஆராய்ச்சியும் வளரவே பொருளாதார பிரச்னைகளே முக்கியப் பிரச்னைகளாகிவிட்டன. இப்பொழுது தேசமென்றால் தொழில் கொடுக்கும் பிரதேசமாகிவிட்டது. பெரிய தேசங்களுக்கு இதில் விசேஷ சௌகரியங்கள் இருக்கின்றன. பழைய கால தேசபக்திக்கும் புதிய பொருளாதாரத்திற்குமுள்ள முரண்பாடே இப்பொழுது நடைபெறும் ஐரோப்பிய யுத்தத்திற்கு முக்கிய காரணமென்று கூறலாம்.

ருஷ்யாவிலோ பொதுவுடைமையே தேசபக்தியின் ஆதாரமாகப் போதிக்கப்படுகிறது. உயர்ந்த கூலியே அமெரிக்கர்களின் தேசபக்திக்கு அஸ்திவாரமாக இருக்கிறது. இங்கிலாந்திலும் சாம்ராஜ்யத்திலிருந்து கிடைக்கும் லாபத்தைத் தொழிலாளிகளுக்கு பிரித்துக் கொடுத்துவருவதால்தான் தேசபக்தி குலையாமல் இருக்கின்றது.

### எல்லைகள்

வயலுக்கு ஆதாரம் வரப்பு. அடுத்த வயல்காரனோடு சண்டைக்குக் காரணமும் அதுவே. ஆதலால் ஒரு தேசத்தின் எல்லைகள் எவ்வளவு நன்றாக அமைந்திருக்கின்றனவோ, அவ்வளவு சமாதானமும் ஒற்றுமையும் நிலைபெற்றிருக்கும். தீவுகளுக்கும் தனிப்பட்ட மலைப்பிரதேசங்களுக்கும் இயற்கையால் வகுக்கப்பட்ட எல்லைகள் அமைந்திருப்பது அதிர்ஷ்டம். மற்ற நாடுகளின் எல்லைகள் சரித்திரத்தாலும், பலாத்காரத்தாலும் ஏற்பட்டவை; நிச்சயமானவையல்ல. அவற்றைக் காப்பதற்காக கோடிக்கணக்கான ரூபாய்கள் செலவழித்துக் கோட்டைகள் கட்டப்படுகின்றன. ஆனால் பிரான்ஸில் கட்டிய மாகினாட் அரண்களும், கிரீஸின் மலைக்கோட்டைகளும் மூன்று நாட்களில் தகர்த்தெறியப்பட்டன.

இரண்டு தேசங்களுக்கு நடுவில் உள்ள எல்லைப் பிரதேசங்களில் இரண்டு தேசத்தார்களும் கலந்தே இருப்பார்கள். இவர்களை நியாயமாகப் பரிபாலிப்பது மிகவும் சிக்கலான பிரச்னையாகவிருக்கின்றது. தனித்தனி பாஷைகளில் கல்வி கற்பிப்பது கஷ்டமாக விடுகிறது. ஒரே பாஷையை பலாத்காரமாக வற்புறுத்துவதும் சங்கடமாக இருக்கிறது. எல்லைப்புறத்திலிருக்கும் தம் தேசத்தாருக்குக் கொடுமை செய்வதாக பக்கத்துத் தேசத்தார்கள் கூப்

பாடு போடுகிறார்கள். அவர்களுடைய அரசாங்கம் சக்தி வாய்ந்ததாகவிருந்ததால் எல்லைப்புறத்தாரின் குறைகளைச் சாக்காகக் கொண்டு ஆக்கிரமிக்கச் சமயம் பார்த்துக்கொண்டிருக்கிறது.

இந்த எல்லைப்புறத் தகவல்களைத் தீர்க்க இரண்டு வழிகள் உண்டு. ஒன்று சமுத்திரமோ மலையோ வரும்வரையில் எல்லைகளையெல்லாம் ஒழித்து ஒரே பிரதேசமாகச் செய்துவிடலாம். இல்லாவிடில் எல்லைப்புறச் சண்டைகளைத் தீர்ப்பதற்கு ஒரு கோர்ட் ஏற்படுத்தி அதன் முடிவை எல்லோரும் ஒப்புக்கொள்ளவேண்டும். இவ்விரண்டையும் ஒப்புக்கொள்ள விரும்பாதவர் என்றும் ஆயுதம் தரித்து எல்லையைக் காப்பாற்றத் தயாராகவிருக்கவேண்டும்.

### பாகிஸ்தான்

இந்தியா ஒரு தேசமல்ல. பரந்த பிரதேசம். பிரிட்டிஷ் ஆட்சியால் ஒருதேசமென்ற தோற்றம் பெற்றிருக்கிறது. ஹிந்துக்களும், முஸ்லீம்களும் ஒரு ஜாதியைச் சேர்ந்தவர்களில்லை. அவர்கள் சேர்ந்து சாப்பிடுவதில்லை. பரஸ்பரம் விவாகம் செய்துகொள்ளுவதில்லை. ஆதலால் முஸ்லீம் பிரதேசங்களைத் தனியாகப் பிரித்துவிடுவதில் யாதொரு தீங்குமில்லை. சந்தோஷமும் சமாதானமுமே உண்டாகும் என்று பாகிஸ்தான்வாதிகள் கூறுகிறார்கள்.

முஸ்லீம்கள் பெரும்பாலும் மதம் மாறிய ஹிந்துக்களே யாவார்கள். அசோகரும் அக்பரும் இந்தியா முழுவதும் ஆண்டார்கள் என்று கூறுவது பிரசார முறையில் சகஜமானபோதிலும் சரியான பதிலாகாது. சரித்திரபூர்வமாகப் பார்த்தால் ஆப்கானிஸ்தானும் பலகாலம் இந்தியாவுடன் சேர்ந்திருந்தது. அதையும் இந்தியாவுடன் சேர்க்க வேண்டுமென்று ஒருவரும் கேட்கவில்லை.

பாகிஸ்தானை எதிர்ப்பதற்கு முக்கிய காரணம் எல்லைகள். இமயமலையும், சமுத்திரமும், நல்ல இயற்கை எல்லைகளாகின்றன. இந்த எல்லைகளைப் பாதுகாப்பதால் சமாதானம் எளிதில் நிலைநிறுத்தப்படும். அதற்குச் செலவும் குறையும். பஞ்சாப், வங்காளம் இரண்டையும் பிரித்துவிட்டால் பாதுகாக்கவேண்டிய எல்லைப்புறங்கள் மிகவும் பெரிதாகி நாட்டின் இரு பாகங்களின் செல்வம் பாதுகாப்பிலேயே செலவழிந்துபோகும். பெரிய மாகினாட் அரண்களைக் கட்டி லக்ஷக்கணக்கான துருப்புக்களை இரு பக்கங்களிலும் எப்பொழுதும் தயாராக வைத்திருக்கவேண்டும். அப்படித் தயாராக விருப்பதாலேயே ஒரு தலைமுறைக்கு ஒருதரம் யுத்தம் உண்டாகி எல்லைகள் மாறிக்கொண்டு வரும்.

இரண்டாவது காரணம் பொருளாதாரம். பஞ்சாபிலும், சிந்திலும் நாட்டுக்கு வேண்டிய கோதுமை விளைகிறது. சணல் வங்காளத்தில்தான் உற்பத்தியாகிறது. இவ்விரு மாகாணங்களிலும் இரும்பு, நிலக்கரி முதலிய சுரங்கப் பொருள்கள் இல்லை. பாகிஸ்தானைப் பிரிப்பதால் நாட்டின் பொருளாதாரம் மிகவும் குலைந்துபோகும்.

மூன்றாவதாக பஞ்சாப் மாகாணத்தையும், வங்காளத்தையும் இரண்டு மூன்று துண்டுகளாகப் போடவேண்டும். மற்ற மாகாணங்களைப்போலவே இம் மாகாணங்களிலும், முஸ்லிம்களும்,

ஹிந்துக்களும் ஒரு ஜாதியாகச் சேர்ந்திருக்க முடியாது. மதத்தின்பேரில் தேசத்தைப் பிரித்தால் மதக்கொடுமைகள் பெரிதும் வளர்ந்து ஹிந்துஸ்தானத்தில் முஸ்லீம்கள் இருக்க முடியாமலும், பாகிஸ்தானத்தில் ஹிந்துக்கள் வசிக்கச் சாத்தியப்படாமலும் போய்விடும்.

இந்தியா இன்னும் ஒரு தேசமில்லை. ஆனால் வங்காளத்தில் அது ஒரு தேசமாகி, அதன் மக்கள் ஒரே ஜனங்களாவார்களென்பது தேசபக்தர்களின் லட்சியமாகும். இக் காலத்தில் இயந்திர நாகரிகமும் பொருளாதாரமும் இந்த லக்ஷியத்திற்கு ஒத்திருக்கின்றன. மதப் பற்றும் நாளடைவில் குறைந்தே தீரும்; கல்வி வளர வளர மூட பக்தியும் குறைந்துபோகும்.

இந்தியாவை ஒரு தேசமாக விரும்புவோர் பாகிஸ்தானை விரோதித்தால் மட்டும் போதாது. இந்த தேசத்து மக்கள் அனைவரையும் ஒரே ஜாதியாக்குவதற்கு வேண்டிய முறைகளையும் கையாளவேண்டும். பொது பாஷையைப் பரப்புவது மிகவும் முக்கியமானது. ஹிந்தி, உருது சண்டையைத் தீர்த்து இரண்டிற்கும் பொதுவாக ஒரு பொதுபாஷையை ஏற்று, ஒரே எழுத்து ஏற்பாடு செய்வது மிகவும் அத்யாவசியமாகும். உடை, சாப்பாடு முதலிய விஷயங்களிலும் பொதுப் பழக்கங்கள் ஏற்படுத்தவேண்டும். பரஸ்பர விவாகம் செய்துகொள்ளுவதில் இருக்கும் தடைகளை நீக்கி, கலப்பு விவாகங்களுக்கு ஆதரவு அளிக்கவேண்டும். அரசியலிலும் பொருளாதாரத்திலும் ஒற்றுமையாகவிருப்போம்; மற்றத் துறைகளில் தனியாக விருப்போம் என்பது நீண்டகாலம் சாத்தியமானதல்ல. ஒருவர் இருவர் அவ்வாறு இருக்கலாம். பெரிய கூட்டத்தார்கள் இவ்விதம் இருக்க முடியாது.

தம் தம் குலதர்மங்களையும் சமூகப் பழக்கங்களையுமே பிரதானமாகக் கருதும் சனாதனிகள் சுயராஜ்யத்தை எதிர்ப்பது ஆச்சரியமில்லை. அந்நிய அரசாங்கம்தான் பழைய சம்பிரதாயங்களை மாறாமல் பார்த்துக்கொள்ள விரும்பமுடியும். ஆனால், அதுகூட இக்கொள்கையை இனி அனுசரிக்க முடியாத காலம் வந்துவிட்டது. வைதீகர்களையும், தீண்டாதவர்களையும் ஏககாலத்தில் திருப்தி செய்து, ஹிந்துக்களையும் முஸ்லிம்களையும் ஒரே சமயத்தில் சந்தோஷப்படுத்தி ராஜ்யத்தை இனி நடத்த முடியாது. ஒன்று சமாதான முறைகளில் இந்த வித்தியாசம் ஒழியவேண்டும். அல்லது பலாத்காரப் புரட்சிகள் உண்டாகி அழிக்கப்படும். ஜாதி, மத வித்தியாசங்களைத் தீர்க்கத் தீவிர முயற்சிகள் எடுக்கப்படாவிடின் அடுத்த ஐம்பது வருஷங்களுக்குள் இந்தியாவிற்கும் ஐரோப்பாவின் கதிதான். அல்லது ருஷ்யாவைப்போல் பெரிய புரட்சி உண்டாகும்.

3568

## அத்தியாயம் 4

### அரசாங்கம்

எல்லா சமூக விஷயங்களிலும் பிரசாரத்திற்கு சக்தியுண்டு. அரசியல் உலகிலோ, தத்துவங்களின் உண்மை பெரிதும் பிரசாரத்தையே பொறுத்திருக்கின்றது. எக் கொள்கைகள் மிகவும்

தீவிரமாகப் பிரசாரம் செய்யப்படுகின்றதோ அவைகளே பரமார்த்தமாகப் பெரும்பாலோர் கொள்கின்றனர்.

இந்த நம்பிக்கையே ஆட்சி செய்வதற்கு அஸ்திவாரமாகும். பிரசாரத்தின் மகிமையால் பொதுவுடைமைவாதிகள் ருஷ்யாவில் போல்ஷிவிக் ஆட்சியை ஏற்படுத்தினார்கள். தங்கள் வெற்றி பிரசாரத்தாலல்ல, பொதுவுடைமைக் கொள்கையென்று வாதித்தார்கள். ஆனால் பொதுவுடைமைக்கு எதிரிடையான பாஸிஸ்ட், நாஜி அரசாங்கங்களைப் பிரசாரத்தைக் கொண்டே முஸோலினியும், ஹிட்லரும் ஏற்பாடு செய்தார்கள்.

இப்புரட்சிகளெல்லாம் பிரசாரத்தால் மட்டுமல்ல, பலாத்காரத்தால் வெற்றி பெற்றனவென்று ஆட்சேபிக்கக்கூடும். ஆனால் உண்மையில் பலாத்காரம் எதிர்ப் பிரசாரத்தை ஒழிப்பதற்காகவே பெரும்பாலும் உபயோகிக்கப்பட்டது.

பிரசாரத்திற்கும் அரசியலுக்குமுள்ள நெருங்கிய சம்பந்தத்தை ஆராய்ந்த ராஜீய சாஸ்திர நிபுணர்கள் பிரசார சுதந்திரமே ஜனநாயகத்திற்கும் சுதந்திரத்திற்கும் முக்கிய அறிகுறி என்கிறார்கள். எந்நாட்டில் எல்லோரும் தம்தம் அபிப்பிராயங்களைத் தாராளமாக எடுத்துக் கூறமுடியுமோ, அங்கே பொதுஜன ஆட்சி தான் நிலைத்திருக்கக்கூடும் என்பது உண்மையே. ஆனால் இங்கிலாந்திலும், அமெரிக்காவிலும் இம்மாதிரி சுதந்திரம் இருப்பதாக எண்ணி ஏமாறவேண்டாம்.

இக் காலங்களில் பிரசாரத்தின் முக்கிய கருவிகள் (1) ரேடியோ, (2) பத்திரிகைகள், (3) பொதுக்கூட்டங்கள், (4) ராஜீயக் கட்சிகள். இவைகளால் செய்யப்படும் பிரசாரத்தைப் பற்றிச் சற்று ஆலோசனை செய்வது அவசியமாகும்.

## ரேடியோ

ரேடியோவைத் தமிழில் 'ஆகாசவாணி' என்று அழைப்பதில் பொருத்தமிருக்கின்றது. புராணங்களில் எப்படி திடீரென்று எங்கிருந்தோ தெய்வ வாக்கு பிறக்கின்றதோ, அவ்வாறே ரேடியோவில் சப்தம் உண்டாகிறது. பேசுவோரின் ஊரும் பெயரும் தெரியாததால் பெரிய ஞானியாக இருக்கவேண்டுமென்று எண்ணுகிறோம்.

எல்லா ரேடியோ நிலையங்களும் சர்க்கார் ஆதீனத்தில் இருக்கின்றன. ஆதலால் சர்க்காருக்கு விரோதமாக ரேடியோ மூலம் பிரசாரம் செய்ய முடியாது.

நன்றாய்ப் பேசத் தெரிந்தவர்கள் பாடத் தெரிந்தவர்கள் எல்லோருக்கும் ரேடியோ மூலம் நல்ல வருமானம் கிடைக்கிறது. சர்க்காருக்கு விரோதமாக இருந்தால் இவ் வருமானம் போய்விடும். உத்தியோகம் கொடுத்து அடக்குவதைவிட இது மிகவும் சிக்கன முறையாகும்.

ஓர் ஆட்சியை நடத்தும் ராஜீயத் தலைவர்களைப் புகழ்வதற்கும் அவர்களுக்கு எதிரானவர்களை இகழ்வதற்கும் இது ஒப்பற்ற கருவி. ஐந்து நிமிஷத்தில் கோடிக்கணக்கான ஜனங்களின் மனத்தில் ஒருவரைப் பற்றி நல்ல அபிப்பிராயமும் மற்றவரைப்பற்றி கெட்ட எண்ணமும் உற்பத்தி செய்துவிடலாம்.

ரேடியோவில் செய்யப்படும் பிரசாரங்களையும், செய்திகளையும் அனுமதியின்றி பத்திரிகைகளில் பிரசுரம் செய்யக்கூடாதென்று சட்டம் செய்யப்பட்டிருக்கிறது. ஆதலால் ரேடியோவின் தப்புப் பிரசாரத்தை எதிர்க்க வழியில்லை.

ரேடியோவின் வளர்ச்சி திடீரென்று ஏற்பட்டுவிட்டதால், அதன் பிரசாரத்திற்கும் ராஜீய சுதந்திரத்திற்குமுள்ள சம்பந்தம் இன்னும் நன்கு ஆராயப்படவில்லை. ஒவ்வொரு ராஜீயக் கட்சிக்கும் ரேடியோ நிலையம் ஸ்தாபித்து பிரசாரம் செய்ய உரிமை ஏற்படவேண்டும். அல்லது, சர்க்கார் நிலையங்களில் அவைகளுக்குப் பிரசாரம் செய்ய சௌகரியங்கள் அளிக்கப்படவேண்டும். அமெரிக்க ஐக்கிய நாடுகளில் ஓரளவு இவ் வசதிகள் அளிக்கப்படுகின்றன. இங்கிலாந்து உட்பட மற்ற எல்லா தேசங்களிலும் ரேடியோ சர்க்கார் ஆதீனத்திலேயே இருந்துவருகிறது.

இப்பொழுது ஒரு ரேடியோ நிலையம் செய்யும் பிரசாரம் உண்மையா என்பதை விரோதி தேசங்களின் ரேடியோ பிரசாரத்தின்மூலம் கண்டுபிடிக்க வேண்டியிருக்கிறது. ஆதலால் யுத்த காலத்தில் ரேடியோவின் சக்தி குறைகிறது. இரண்டு கட்சிகளும் ஒரே சமயத்தில் எதிரியை முறியடித்துவிட்டதாக தினந்தோறும் கூறிவந்தால், ரேடியோ பிரசாரத்தில் அவநம்பிக்கை ஏற்படுகிறது. இதற்காக எதிரியின் பிரசாரத்தைக் கேட்பதுகூட குற்றமாக பாவிக்கப்பட்டுத் தண்டிக்கப்படுகின்றனர். ரேடியோ மூலம் எல்லா நாட்டுப் பிரசாரங்களையும் கேட்கும் உரிமை மிகவும் முக்கியமானது. அவைகளைச் சீர்தூக்கிப் பார்க்கும் பழக்கம் உண்டானதும் ரேடியோப் பிரசாரத்தால் எளிதில் ஏமாந்து போகமாட்டார்கள்.

## பத்திரிகைகள்

ரேடியோவினால் பத்திரிகைகளின் சக்தி குறைந்துவிடவில்லை. பிரசாரத்தில் ஒரு வித போதை இருக்கின்றது. ரேடியோவில் சுருக்கமாகக் கூறப்பட்ட விஷயங்களைப்பற்றிப் பத்திரிகையில் விவரமாகப் படிக்க விரும்புகிறார்கள். மாறுபட்ட அபிப்பிராயங்களைப் பத்திரிகைகளில்தான் சாங்கோபாங்கமாக வாத விவாதம் செய்யலாம்.

ஏதேச்சாதிகார அரசாங்கங்கள் பத்திரிகைகளையும் தம் வசத்தில் வைத்துக்கொள்ள விரும்புவது சகஜம். பத்திரிகை சுதந்திரத்தை ஜனநாயக ஆட்சியின் ஆணிவேராகக் கருதுவது நியாயம் தான். ஆனால் இங்கிலாந்திலும், அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் பத்திரிகை சுதந்திரமிருக்கிறதென்று சொல்வது ஓரளவுதான் உண்மை. இந்நாட்களில் பத்திரிகைகள் நடத்துவதற்கு ஏராளமான பணம் வேண்டும். பெரிய முதலாளிகளின் விளம்பரங்கள் வேண்டும். பாங்கிகளின் தயவு வேண்டும். அதிகாரிகளின் சிநேகமும் வேண்டும். ஆதலால் பத்திரிகைகள் பணக்கார வகுப்பார்களின் நன்மைக்காக அவர்கள் அபிப்ராயங்களை வெளியிடுவதற்காகவே பெரும்பாலும் பிரயோசனப்படுகின்றன.

பத்திரிகைகளில், நுட்பமான விஷயங்களைப்பற்றி அறியாதவர்கள் மேலோட்டமாக எழுதுகிறார்கள். ஆதலால் ஜனங்கள் மனதில் குழப்பமும் சந்தேகமும் பரவுகின்றன. கொஞ்சம் எழுதப்

படிக்கத் தெரிந்தவர்கள் அச்சில் எதைப் படித்தாலும் அதைப் பரமார்த்த தத்துவமாக நம்புகின்றனர். இந்த உண்மையை அரசியலில் உபயோகப்படுத்துவதற்கு ஹிட்லர் சில தந்திரங்களைத் தன் நூலில் கூறியிருக்கிருர். எளிதில் புரியக்கூடிய சில வாக்கியங்களை ஓயாமல் உபதேசி. அவைகளில் சந்தேகம் வரக்கூடிய சர்ச்சைகளுக்கு இடங்கொடாதே. சிறிய பொய் சொல்வதைக் காட்டிலும் பெரிய பொய்யைப் பிடிவாதமாகச் சொல்லு. ஜனங்கள் உள்ளத்தில் ஆழ்ந்து கிடக்கும் மிருகத்தனத்திற்குப் போக்கு உண்டாக்கி மனதார வெறுப்பதற்குப் பூதங்கள் கற்பனை செய்து கொடு. இம்முறைகளை உபயோகித்து ஜர்மானிய ஜனங்களை மட்டுமல்ல, மற்ற நாடுகளிலும் கோடிக்கணக்கான மனிதர்களை, தான் ஒப்பற்ற சக்தி பெற்றவன் என்று எண்ணச் செய்துவிட்டார்.

இவ்வாறு பத்திரிகைகளைத் துஷ்பிரயோகம் செய்வது தவறு என்று கூறிவிடலாம். ஆனல் சிறிய கூட்டத்தார்களின் சுயநலத்திற்காக உண்மையைத் திரித்துப் பொய்யை மெய்யைப் போல் காட்டுவதால் இதைவிட அதிக பிரயோசனம் உண்டாகிறதென்று சொல்லமுடியாது. பல பத்திரிகைகள் தனித்தனி கூட்டத்தார்களின் நன்மையைத் தேடிப் பிரசாரம் செய்வதால், எல்லாப் பிரசாரத்திலும் அவநம்பிக்கை உண்டாகிறது. மூடநம்பிக்கைகள் பரவுவது நலமா, எந்த நம்பிக்கைகளும் இல்லாமலிருப்பது நலமா வென்னும் கேள்விக்கு முடிவு சொல்வது சுலபமல்ல. கோர்ட்டில் ஒரே வழக்கில் இரண்டு புத்திசாலி வக்கீல்கள் வாதிக்கும்பொழுது அவ்வாதங்களைச் சீர்தூக்கிப் பார்ப்பதில் பழகிய நியாயாதிபதி அடிக்கடி பிரமிக்கிருன். எதையும் சீர்தூக்கிப் பார்க்கச் சக்தியில்லாத ஜனங்கள் பத்திரிகைகளின் வாதங்களைப் பரிசிலனை செய்வது அசாத்தியமானது.

இந்த தர்ம சங்கடத்திற்கு ஏதாவது பரிகாரமுண்டா? கல்வியும், பகுத்தறிவும் வளர்வதே நிச்சயமான பரிகாரம். ஆனல் உண்மையை நாடும் சமூகம் சில முறைகளைக் கையாளலாம். செய்தி, அபிப்பிராயம், விளம்பரம் இம்மூன்றையும் சேர்த்து பத்திரிகைகள் நடத்தப்படுவதால் பல தீமைகள் உண்டாகின்றன. இம்மூன்றையும் பிரித்துவிட்டால் லாபத்திற்காகப் பிரசாரம் செய்வது குறைந்துபோகும். எல்லா விளம்பரங்களையும் சர்க்கார் வசம் எடுத்துக்கொண்டு அதனல் வரும் லாபத்தை, நஷ்டத்தில் நடந்தவேண்டிய ஆராய்ச்சிப்பத்திரிகைகளுக்கு உபயோகப்படுத்த வேண்டும். சமாசாரப் பத்திரிகைகள் கூடியவரையில் ஜாக்கிரதையாக சம்பவங்களை விசாரித்துப் பிரசுரிக்கவேண்டும். அபிப்பிராய பத்திரிகைகள் வியாசம் எழுதுவோரின் பெயருடன் அபிப்பிராயங்களை வெளியிடவேண்டும். இக்காலத்தில் பெயரில்லாமல் பத்திரிகைகளில் தலையங்கங்களும், வியாசங்களும் வருவதால் பத்திரிகை ஆசிரியர்களும் உப ஆசிரியர்களும் பிரத்தியேக அறிவுள்ளவர்களென்ற எண்ணம் சாதாரண மக்கள் மனத்தில் உதிக்கிறது.

### பொதுக்கூட்டங்கள்

மற்ற விதங்களில் என்ன பிரசாரம் செய்தாலும், பொதுக்கூட்டங்களில் ஒருவன் நேரில் மற்றவர்களுக்குச் சொல்வது போல் குதூகலம் ஏற்படாது என்று ஹிட்லர் சொல்லுகிருர்.

இது உண்மை. நேரில் கேட்கும்பொழுது பிரசாரகர் சொற்களுக்கு ஒரு ஜீவ சக்தியிருக்கின்றது.

தவிரவும் பொதுக்கூட்டத்தில் பிரசாரம் செய்யும் உரிமைதான் ஏழைகளுக்கும் தொழிலாளிகளுக்கும் நிச்சயமான சுதந்திரமாகும். இது பாதிக்கப்படாமல் இருக்கும் வரையில் உண்மையை முற்றிலும் மறைக்கமுடியாது.

ஆனால் பொதுக்கூட்டப் பிரசாரத்தில் ஒரு பெரிய குறை இருக்கிறது. மற்றவர்களைத் திட்டி உண்மையைத் திரித்து காரசாரமாகப் பேசினால்தான் பிரசங்கம் கேட்பவர்களுக்கு ருசியாயிருக்கிறது. அப்படிப் பேசிப் பழக்க முள்ளவர்கள் உண்மையை உள்ளபடியே எடுத்துரைக்கும் சக்தியை சீக்கிரம் இழந்துவிடுவார்கள். ஒரு மனிதனைப் பற்றிப் பேசினால் அவனை ஒன்று தேவலோகத்தில் கொண்டு போய் வைப்பார்கள். அல்லது நரகத்தில் தள்ளுவார்கள். ஒரு திட்டத்தைப் பற்றி வாதித்தால் அதனால் உடனே சுவர்க்கலோக முண்டாகுமென்பார்கள். அல்லது சமூகம் அடியோடு நாசமாகும் என்பார்கள். இரண்டு பக்கத்திலுள்ள தார தம்மியத்தையும் மற்றவர்கள் எடுத்துக் கூறமுயன்றால் கேட்பவர்களுக்குச் சப்பென்றிருக்கிறது. ஹிந்திக்கு எதிர்ப் பிரசாரம் செய்தவர்கள் மிகவும் கேவல முறையில் பிரசங்கங்கள் செய்த பொழுது ஏன் ஏராளமான ஜனங்கள் கூடுகிறார்கள் என்று பல அறிஞர் துக்கப்பட்டதுண்டு. இது கூட்டத்தின் சுபாவம் என்று அறியவேண்டும். எவ்வளவு அறியாத குடியானவனாயினும் அவனுடன் தனியாகப் பேசும் பொழுது கொஞ்சம் நிதானமாக இருக்கவேண்டும். அறிஞர் கூட்டத்தில் கூட கொஞ்சம் சாமர்த்தியசாலியாகவிருந்தால் எதையும் சொல்லிக் கண்டிக்கப்படாமல் தப்பிவிடலாம். பல மனிதர் ஏககாலத்தில் கூடும்பொழுது ஒருவித மோகமுண்டாகிறது. அதை வளர்த்து கேட்போரின் மனதைக் கவர்வதே மேடைப் பிரசாரத்தை வெற்றியுடன் செய்யும் சூட்சுமமாகும். பெரிய லக்ஷியங்களில் பற்றுண்டாக்கி தீரச் செயலுக்குத் தூண்டுவோர் பெரியார். மற்றவர்கள் பகையையும், பொறாமையையும் பெருக்கி ஆத்திர மூட்டுவர்.

ஒலிபரப்பும் கருவி தோன்றும் வரையில் நல்ல தொண்டைக்கும் பெரிய மகிமையிருந்தது. இப்பொழுது பொதுக்கூட்டப் பிரசங்கத்திற்கு அது முக்கியமான அங்கமாயில்லாமல் போய்விட்டது. ஆனால் இந்த ஒலி பரப்பும் கருவியின் உபயோகத்தைக் கட்டுப்படுத்தும் அதிகாரத்தால் அதிகாரிகள் இப்பிரசாரத்தை அடக்கியாளப் புதியதோர் வழியும் உண்டாகிவிட்டது.

பொதுக்கூட்டங்களில் கலவரமுண்டாக்கி அவைகளைக் கலைப்பது மிகவும் சுலபம். பதினாயிரம் பேருள்ள கூட்டத்தை நூறு எதிராளிகள் எளிதில் கலைத்துவிடலாம். அப்படிக் கலைப்பவர்களைத் தடுப்பது போலீசாரின் வேலை. ஆனால் போலீசாருக்குப் பிரியமில்லாத பிரசாரத்திற்காகக் கூட்டங்கள் போடும்பொழுது அவர்களை நம்பமுடியாது. கூட்டத்தைக் கலக்க முயற்சி செய்பவர்களைக் கூடியவரையில் பலாத்காரமின்றி அடக்கிவைப்பதற்குச் சாமர்த்திய முள்ளவர்களைத் தயார் செய்வது அரசியல் பிரசாரத்திற்கு இன்றியமையாததாகும்.

கூட்டத்தை நன்கு நடத்துவது அதன் அக்ராசனர் திறமையைப் பொறுத்திருக்கிறது. ஊருக்குப் பெரியவர்கள் என்ற அப்பாவிகளைப் பெரிய கூட்டங்களுக்கு அக்ராசனராகப் போடுவது தவறு. பொறுமையும் சமயோசித புத்தியும் உடைய பொது ஜனங்களுக்குப் பிடித்தவர்களையே சபைத் தலைவர்களாகச் செய்ய வேண்டும். பிரசங்கத்திற்கு நடுவில் குறுக்கிடுவோரைச் சமாதானப்படுத்தி உட்காரவைத்தும், அதிகப் பிரசங்கிகளைக் கண்டிப்பாக அடக்கியும் கூட்டத்தை இனிமையாக முடித்து வைப்பது பொறுப்பு வாய்ந்த வேலையென்பதை உணர்ந்து, கூட்டம் ஏற்பாடு செய்யும் பொழுதே தகுந்த தலைவரையும் திட்டம் செய்துவிட வேண்டும்.

### ராஜீயக் கக்ஷிகள்

அரசாங்கம் நடப்பதற்குப் பிரசாரம் அவசியமாகவிருப்பதால் அதைச் சரிவர நடத்த ராஜீயக் கக்ஷிகள் வேண்டும். கக்ஷிகளைப் பற்றி பல புகார்கள் செய்யப்படுகின்றன. ராஜீயதிட்டங்கள் வகுப்பதிலும், பிரசாரம் செய்வதிலும் கக்ஷித்தலைவர்கள் எதேச்சாதிகாரமாக நடந்து கொள்ளுகிறார்கள் தேச நன்மையைக் காட்டிலும் கக்ஷியின் பெருமையையே நாடுகிறார்கள். கக்ஷிக்குள் அபிப்பிராய பேதத்திற்கு இடம் கொடுப்பதில்லை. எதிரிக்கக்ஷிகளை அநியாயமாகத் திட்டுகிறார்கள். அல்ப விஷயங்களைப் பெரிதாகச் செய்து முக்கிய விஷயங்களை அலக்ஷியம் செய்கிறார்கள்.

இவற்றில் உண்மை இருக்கிறது. ஆனால் ஒரு கக்ஷியும் இல்லாமல் அரசியல் நடத்தமுடியாது. அப்படிச் செய்ய வேண்டுமானால் தொட்டதற்கு எல்லாம் பலாத்காரத்தையும், பயமுறுத்தலையும் உபயோகிக்கவேண்டும். எங்கும் ஒற்றர்களை வைத்துப் பொதுஜன அபிப்பிராயத்தை அறியவேண்டும்.

ஆதலால் கக்ஷிகள் வேண்டாமென்று சொல்வோர் அரசியல் சூக்ஷ்மங்களை அறியாதவர். ஒரு தேசத்தில் ஒரே கக்ஷியிருக்க வேண்டுமா, இரண்டு அவசியமா, பல கக்ஷிகள் இருக்கலாமா வென்பதே உண்மையான பிரச்னையாகும்.

எதேச்சாதிகார நாடுகளில் ஒரே கக்ஷிதான் அனுமதிக்கப்படுகிறது. இதற்கு அடியிற்கண்ட காரணங்கள் கூறப்படுகின்றன. பொதுஜனங்களுக்கு நுட்பமான அரசியல் விஷயங்கள் தெரியாது. பல கக்ஷிகள் பிரசாரம் செய்வதால் சந்தேகமும், மனக்குழப்பமும் உண்டாகும். அரசியல் வேலைக்கு லாயக்குள்ளவர்கள் கக்ஷியில் சேர்ந்து, விஷயங்களை ஆலோசித்துத் தங்களுக்குள் முடிவுசெய்து, அம்முடிவுகளைப் பொதுமக்களுக்கு எடுத்துரைக்க வேண்டும். அப்பொழுதுதான் பெரும்பாலோர் மனத்தில் அரசாங்கத்தாரின் திட்டங்களில் நம்பிக்கையும், குதூகலமும் ஏற்படும். தங்களுடைய கடமைகளையும், தியாகங்களையும் சந்தோஷத்துடன் செய்வார்கள். ருஷியாவிலும், ஜெர்மனியிலும், இத்தலியிலும் மற்ற எதேச்சாதிகார நாடுகளிலும் ஒரே ராஜீயக்கட்சி சட்ட பூர்வமாக அனுமதிக்கப்படுகின்றது.

பல ராஜீயக்கட்சிகள் இருந்தாலொழிய எவ்வித சுதந்திரமும், ஜனநாயகமும் இருக்கமுடியாதென்று ஜனநாயக வாதிகள் கூறுகிறார்கள். ஒரு திட்டத்திலோ கொள்கையிலோ உள்ள நன்மை,

திமை எல்லாவற்றையும் ஒருவரே நன்கு உணரமுடியாது. அதைப் பலவாறு ஆராய்ந்து உரைக்கவும் எதிர்க்கவும் சுதந்திரமிருந்தால் உண்மை வெளிப்படும். ஒரு தனி ஆசாமிக்கோ கட்சிக்கோ தன் தவறை உணர்வதற்கும், உணர்ந்த பிறகு அதற்குப் பரிகாரம் தேடுவதற்கும் சாத்தியப்படுவதில்லை. பல கக்ஷிகள் இருந்தால் ஒரு கக்ஷியின் தவறை மற்றவர்கள் எடுத்துக் காண்பித்து வேறு முறைகளை அனுஷ்டிப்பதற்கு எளிதில் சாத்தியமாகும். தவிர எக்கட்சியும் கொஞ்ச காலத்திற்குப் பிறகு சக்தியிழந்து மடங்களாகி விடுகின்றன. பழைய தலைவர்கள் மடாதிபதிகளாகின்றனர். அவர்களைக் கட்சிக்குள்ளிருந்து எதிர்க்கமுடியாது. புதிய கக்ஷிகள் மூலம் தான் அவர்களுடைய அட்டகாசங்களை அடக்க முடியும்.

அப்படியானல் ஒரு நாட்டில் எவ்வளவு ராஜீய கட்சிகள் இருக்கின்றனவோ அவ்வளவு நன்மையா என்ற கேள்வி பிறக்கும். பிறரை எதிர்பார்ப்பதே முக்கியமான காரியமாக விருந்தால் அது நன்மை தான். ஆனல் காரியம் நடப்பதற்கு இது சாதகமாக விராது. எப்படி விவசாயத்திற்கு மழையில்லாவிட்டாலும் கஷ்டம், அதிக மழை பெய்தாலும் கஷ்டமோ, அதேபோல ஒரு தேசத்தில் ராஜீய கட்சிகள் இல்லாவிட்டாலும், அதிக கட்சிகள் இருந்தாலும் தீமைதான். இரண்டு பெரிய கட்சிகள் இருப்பதுதான் நலமென்று இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் கருதப்படுகிறது. ஒன்று மாறி மற்ருென்று ராஜ்யபாரம் ஏற்றுத் தவறுகளைத் திருத்தி நாட்டின் நலத்தைத் தேடமுடியும். எதிர்க் கக்ஷியின் பயத்தால், ஒரு கக்ஷியும் மிகவும் அக்கிரமமான காரியத்தைச் செய்ய முன்வராது.

ஒவ்வொரு வாதத்திலும் ஓரளவு உண்மையிருக்கிறது. யுத்த காலத்தில் ஜனநாயக நாடுகளிலும் எதிர்க்கக்ஷிகள் ஒன்று சேர்ந்து ஒரே கக்ஷியாவதைக் காண்கிருேம். பெரிய மாறுதல்களை ஒரே அடியாகச் செய்ய வேண்டுமானல் ஒரே கக்ஷி மூலம்தான் செய்ய முடியும். அதனல் ஏற்படும் எதேச்சாதிகாரத்தையும் ஏற்றுக் கொள்ளவேண்டும். சாதாரண காலங்களில் இரண்டு கட்சி ஆட்சியே சமாதானத்தை நிலைநிறுத்திச் சிறிய சீர்திருத்தங்களைச் செய்ய செளகரியமாகவிருக்கும். சிக்கலான பிரச்னைகள் கிளம்பும் பொழுது புதிய கக்ஷிகள் தோன்றுவது வருந்தத்தக்கதல்ல.

## பலாத்காரம்

பலாத்காரத்தை வெறுக்கலாம். ஆனல் அதில்லாமல் அரசாங்கம் நடக்கமுடியாது. பெரும்பாலோரை பிரசாரத்தால் வசப்படுத்தி மற்றவர்களைத் தண்டனையின் பயத்தால் ஆளுவதே சாமர்த்தியமான அரசியல் முறை. ஆனல் தன் கட்டளைகளை அலக்ஷியம் செய்தும், சட்டங்களை மீறியும், வரிகளை மறுத்தும் எதிர்ப்பவர்களைப் பலாத்காரமாகத் தண்டிக்காத ராஜ்யம் மூன்று நாளில் கவிழ்ந்துபோகும். இது எல்லா அரசாங்கங்களுக்கும் பொதுவான உண்மை. எதேச்சாதிகாரங்களுக்கு மட்டுமல்ல. பிரதிநிதிகள் மூலமாய் நேரில் ஜனங்கள் அனுமதியின் பேரில் சட்டங்கள் செய்வதால் அதைப் பெரும்பாலோர் சந்தோஷத்துடன் அனுஷ்டிப்பதற்கு சாதகமாகவிருக்கும். ஆனல் இஷ்டமுள்ளவர்களும் சரி, இஷ்டமில்லாதவர்களும் சரி கீழ்ப்பட்டாலொழிய சட்டம்

சட்டமாகாது. சாதாரணமாக இஷ்டமில்லாதவர்களும் தம் கடமையென்று சட்டத்தை ஏற்றுக்கொள்ளுகிறார்கள். கீழ்ப்படியாதவர்களுக்கு உடனே தண்டனை கிடைக்குமென்ற நியமம்தான் அரசாங்கச் சட்டத்திற்கும் மற்ற ஸ்தாபனங்களின் விதிகளுக்குமுள்ள வித்தியாசம்.

பலாத்காரத்தையும், அதனை ஆதாரமாகவுள்ள சட்டத்தையும் எதற்காக உபயோகப்படுத்தலாம், எவ்விஷயங்களில் அவைகள் தலையிடக்கூடாது என்று சர்ச்சை செய்யப்படுகிறது. மதத்தில் தலையிடக் கூடாதென்கிறார்கள். குடும்ப நிர்வாகத்தில் பிரவேசிக்கலாகாதென்கிறார்கள். பழைய பழக்க வழக்கங்களில் புகக்கூடாதென்கிறார்கள். சொத்துரிமைகளில் கை வைக்கக்கூடாதென்கிறார்கள். வியாபாரத்தில் அரசாங்கம் கலக்கக் கூடாதென்கிறார்கள். இதையெல்லாம் ஒப்புக்கொண்டால் அரசாங்கத்திற்கு வேலையில்லாமல் போய்விடும். ஆனால் மதத்தில் தலையிடக் கூடாதென்று கேட்பவர்கள், தம் மத உரிமைகளை பலாத்காரத்தைக் கொண்டு அரசாங்கம் பாதுகாக்க வேண்டுமென்கிறார்கள். அவ்வாறே ஒவ்வொரு கூட்டத்தாரும் தமக்கு சௌகரியத்தையும் லாபத்தையும் அரசாங்கம் தேடவேண்டுமென்று கோருகின்றனர். அரசாங்கம் தலையிடக்கூடாத விஷயம் ஒன்றுமில்லை. புருஷன் தன் மனைவியைக் கொல்லும்படி விட்டுவிட முடியாது. பெற்றோர்கள் குழந்தைகளை தற்குறிகளாக வைத்திருக்க உரிமையில்லை. மதத்தின் பேரால் மற்றவர்களுக்குத் தொந்திரவு செய்ய அனுமதிக்கமுடியாது. எல்லாக் காரியங்களிலும் சமூகநன்மைக்காகத்தலையிடுவது அரசாங்கத்தின் கடமையாகும். எவ்விஷயத்தில் எவ்வளவு தூரம் தலையிடவேண்டுமென்பது காலதேச வர்த்தமானங்களைப் பொறுத்திருக்கும்.

வீடுகளில் அசுத்தத்தை வெறுத்தால் மட்டும் போதாது. அவைகளை நீக்கத் தயாராக இருக்கவேண்டும். மலஜலங்களைப் பற்றிப் பேசும்பொழுது அருவருப்புக் காட்டி, கண்டவிடங்களில் நம் ஜனங்கள் அவைகளைக் கழிப்பதுபோல், பலாத்காரத்தைப் பேச்சில் வெறுத்துவிட்டால் மட்டும் போதாது. அவசியமான பொழுது கூசாமலும், திறமுடனும் பலாத்காரத்தை உபயோகிக்கப் பழக்கமுள்ள நாடுகளிலேயே சமாதானமும் நியாயமும் நடைபெறும். நாட்டிலுள்ள அனைவரும் வெளிநாட்டுப் படையெடுப்புக்களைத் தடுக்கவும், உள்நாட்டுக் கலகங்களை அடக்கவும் எப்பொழுதும் தயாராக விருக்கவேண்டும். ஆதலால் எல்லோரையும் கட்டாயமாகச் சிப்பாய்களாகவும், கான்ஸ்டேபிள்களாகவும் பழக்குவது புத்தியுள்ள அரசாங்கத்தின் கடமையாகும். இல்லாவிட்டால் அன்னிய ஆட்சியும், போலீஸ் ஆட்சியும் ஏற்படாமல் தடுக்க முடியாது.

தெருச் சண்டை அல்லது பலாத்காரப் புரட்சி செய்தாலொழிய, நாகரீகமுள்ள அரசாங்கங்களில் பிரஜைகளின் பேரில் நேரில் பலாத்காரம் பிரயோகிக்கப்படுவதில்லை. சட்டப்படி குற்றம் சாட்டி கோர்ட்டில் விசாரணை செய்து பிறகு தண்டனை கொடுக்கப்படுகிறது. இதுவே சரியான முறையென்பதில் சந்தேகமில்லை. ஆனால் இதை அனுஷ்டிப்பதில் குற்றம் செய்யாதவர்கள் பலருக்கு அநியாயமான தொந்திரவு ஏற்படுகிறது.

கோர்ட்டுத் தீர்ப்பால் ஏற்படும் தண்டனையைக் காட்டிலும் விசாரணைக் காலத்தில் உண்டாகும் கஷ்டமும், செலவும் அதிக தண்டனையாக விருக்கிறது. போலீஸ்காரர்களும் மனிதர்கள். சந்தேகத்தைக் கொண்டு குற்றவாளிகளின் பேரில் நடவடிக்கை எடுத்துக் கொள்ளாவிட்டால் எக்குற்றத்தையும் தடுக்கமுடியாது. ஆதலால் இவ்வித அநியாயம் சிலவேளை சம்பவித்தே தீரும் என்று சமாதானம் கூறப்படுகிறது. நல்ல எண்ணத்தோடு தம் வேலையைச் செய்யும் உத்தியோகஸ்தர்கள் பேரில் குற்றம் சொல்லக் கூடாது என்று ஒப்புக்கொள்ளலாம். ஆனால் ஒரு குற்றமும் செய்யாமல் அநியாயமாகத் தன்பேரில் நடவடிக்கை எடுக்கப் பட்ட நிரபராதிக்கு இந்தச் சமாதானம் போதாது. அவனுக்குச் சமூகத்திலிருந்து ஈடு கொடுப்பது நியாயமாகும். எப்படி சிவில் வியாஜ்ஜியத்தில் தோற்றவர் ஜெயித்தவருக்குச் செலவு தொகை கொடுக்கவேண்டுமோ, அதேபோல கிரிமினல் கேஸ்களிலும் நிர பராதியென்று தீர்ப்புச் சொல்லப்பட்டால் செலவு தொகையும் நஷ்டமும் கொடுக்கப்பட வேண்டும்.

சாதாரணமாக சட்டத்தை மீறிக் குற்றம் செய்வோர்களுக்கு சிறைத்தண்டனை கொடுக்கப்படுகிறது. இதைப்பற்றி பெரிய அபிப் பிராய பேதங்கள் இருந்துவருகின்றன. பழைய சம்பிரதாய வாதிகள் சிறையை பயங்கரமாக வைத்திருந்தாலொழிய குற்றம் செய்ய பயப்பட மாட்டார்கள் என்கிறார்கள். எம்மனிதனும் வேண்டுமென்று குற்றம் செய்வதில்லை. தன் பிறப்பு வளர்ப்புக் குறைகளாலும் துரதிர்ஷ்டத்தாலும் குற்றம் செய்கிறான்; அவனைக் கொடுமையாக நடத்துவதில் பயனில்லை; மனோ வியாதியுடைய வனகப் பாவித்துச் சிறைக்கூடங்களை சிகிச்சைசாலைகளாகச் செய்யவேண்டுமென்று மற்றவர்கள் கூறுகிறார்கள்.

குறைந்த சிறைத்தண்டனை கொடுப்பதால் எவ்வித சீர்திருத் தமும் செய்ய முடியாதென்று சிலர் வாதிக்கின்றனர். நீண்ட காலம் ஒரு மனிதனைச் சிறையில் அடைத்து வைத்திருப்பதால் அவன் திரும்பவும் சமூக வாழ்க்கைக்கு யோக்கியதையில்லாமல் போய்விடுகிறான் என்று மற்றவர்கள் கூறுகிறார்கள். இருபது வயது வாலிபனைப் பிடித்துப் பதினைந்து வருஷம் சிறையில் வைத்து முப்பத்தைந்து வயதுக்கு வெளியில் விடுவதைவிட அவனை ஒரே யடியாகக் கொன்று விடுவது நலமென்றுதான் தோன்றுகிறது.

சட்டத்தை சிறைவாச மூலம் அமுல் செய்யவேண்டுமென் பது சமீபகால ஏற்பாடு. பண்டைக்காலங்களில் அரசியல் கைதி களைத்தான் சிறையில் வைப்பது வழக்கம். மற்றவர்களை அடித்தும் சூடுபோட்டும் மற்ற விதங்களில் தண்டித்தும் விட்டுவிடுவது வழக்கம். இந்த முரட்டுத்தனமான விதங்களைக் கண்டு வெறுப் படைந்து கண்ணுக்குத் தெரியாமல் கஷ்டப்படட்டும் என்று சிறைச்சாலையை ஏற்படுத்தினார்கள்.

கிராமத்தில் ஒரு வாழைத்தாரைத் திருடியவனையும், கோபத் தால் தெருச்சண்டை போடுவோர்களையும், காமத்தால் திடீ ரென்று மதியிழப்பவனையும், பிதுரார்ஜித பாகச்சண்டைகளுக்கும் சிறைத் தண்டனை விதிப்பது மூடத்தனமாகத் தோன்றுகிறது. ஒன்றிரண்டுதரம் சிறைவாசம் அனுபவித்தவர்களுக்கு அதனிட

முள்ள பயமும் போய்விடுகிறது. கூடிய வரையில் சிறைத் தண்டனைக்குப் பதிலாக வேறு தண்டனைகள் ஏற்படுத்துவது நலம். காமத்தால் குற்றம் செய்பவர்களை நல்ல வைத்திய முறையில் நபும்சகர்களாகச் செய்துவிடலாம். சிறிய குற்றங்களுக்கெல்லாம் மூன்று நாட்களிலிருந்து மூன்றுவாரங்கள் கட்டாய உபவாசம் செய்வித்து விடலாம். மூன்றுமாத சிறைக்குப் பயப்படாதவனும் மூன்று நாள் பட்டினிக்கு நடுங்குவான். அந்தத் தண்டனையால் குற்றவாளியின் தேகத்திற்கும் மனதிற்கும் எவ்வித தீமையும் ஏற்படாது. சொத்துக்காகக் குற்றம் செய்வோர்களுக்குக் கடுமையான அபராதமே பெரிய தண்டனையாகும்.

சிறை நடத்துவதில் கடுமைக்கும் கொடுமைக்கும் பெரிய வித்தியாசமுண்டு. நமது சிறைகளுள் அதிகக் கடுமையில்லை. லஞ்சத்தால் ஆகாத காரியமில்லை. விதிக்கு விரோதமாகப் பொடியும், பீடியும் மற்ற சாமான்களும் தாராளமாக வியாபாரமாகின்றன. ஆனால், வார்டர்கள் மரியாதைக் குறைவாகப் பேசுவதும் அடிப்பதும் சகஜமாக விருக்கின்றது. இதை மாற்றி விதிகளை ஒழுங்காக ஏற்படுத்திக் கடுமையாக நிர்வாகம் செய்ய வழி தேடவேண்டும். வெளியில் செய்வதைவிட, சிறையில் கைதி ஏன் குறைவாக வேலை செய்யவேண்டும்? அப்படி ஒழுங்காக வேலை செய்தால் ஏன் நன்றாக அவர்களை நடத்தக்கூடாது?

## அரசாங்க அமைப்பு

எல்லா அரசாங்கங்களின் அமைப்புக்களும் இரண்டாக வகுக்கப்படலாம். (1) முக்கிய அரசாங்க அதிகாரம் ஒருவராலோ, அல்லது ஒரு கூட்டத்தாராலோ வகிக்கப்படும் அரசாங்கங்கள், (2) பொதுஜன சம்மதத்தைக் குறிப்பிட்ட காலத்திற்கு ஒரு முறை பெற்று ஆளும் அரசாங்கங்கள். முதல் வகுப்பைச் சேர்ந்தவைகளை ஏதேச்சாதிகாரம் என்றும் மற்றதை ஜனநாயகம் என்றும் சொல்லலாம்.

ஏதேச்சாதிகாரம் இயற்கையானது. ஒரு மிருகக்கூட்டத்தை எடுத்துக்கொண்டால், அவை தலைவனைத் தேர்ந்தெடுப்பதில்லை. மிக்க பலமோ, வேகமோ பொருந்திய ஒரு மிருகம் தானே தலைமை ஸ்தானத்தை வகித்துக்கொள்கிறது. மற்ற மிருகங்கள் அதை ஒப்புக்கொள்கிறது. ஆனால் மிருகக் கூட்டத்தில் ஒவ்வொரு மிருகமும் தன் இரையைத் தானே தேடித் தின்கிறது. சிறிய குட்டிகளுக்குத் தாய் பால் கொடுப்பதைத் தவிர, ஒரு மிருகம் மற்ற மிருகங்களுக்குச் சேவகம் செய்வதில்லை. ஆதலால் ஒரு கூட்டத்தில் பரஸ்பரச் சண்டை கிடையாது. மனித சமூகங்களிலும் இந்த நியமம் இருந்துவிட்டால் ராஜ்யாதிகாரத்தைப் பற்றிச் சண்டை ஏற்படாது. ஆனால் நமக்குள் அதிகாரத்தின் முதற்பலன் மற்றவர்கள் சேவகத்தால் சௌகர்யம் தேடுவதே. ஆதலால் சாமர்த்தியம் சக்தி, பலம் எது இருந்தாலும் இல்லாவிட்டாலும் எல்லோரும் அதிகாரத்தை விரும்புகிறார்கள்.

உடை, உணவு, தொழில், விளையாட்டு எல்லாவற்றையும் மனிதன் புத்தி பூர்வமாகச் செய்யவேண்டியிருக்கிறது. ஆனால் வாழ்க்கையின் விசித்திரம் அதிகரித்த போதிலும், கஷ்டமும் கவலையும் வளர்கிறது. ஒருவன் மற்றவர்களை ஏமாற்ற வழி தேடுகிறான்.

அரசாங்க அதிகாரம், ஏமாற்றுவதற்கு நல்ல கருவி. ஏன் ஏமாற்று கிருய் என்று சொல்லும்பொழுதே எதிரியை அடித்தும், மிரட்டியும் அடக்கிவிடலாம். ஆதலால் ஓர் அரசாங்க அமைப்பைப்பற்றி ஆலோசிக்கும்பொழுது இரண்டு கேள்விகள் பிறக்கின்றன. அந்த அமைப்பால் சமூக வேலைகளைத் திறம்படச் செய்ய முடியுமா? அக்கிரமத்திற்கும் ஏமாற்றத்திற்கும் அது அதிக இடம் கொடுக்குமா?

ஏதேச்சாதிகாரி கெட்டிக்காரனாக விருந்தால், ஏதேச்சாதிகாரமே திறமையாக வேலை செய்யுமென்பதைப் பிரத்தியக்ஷமாகப் பார்க்கிறோம். ஜனநாயக ஆட்சியில் எல்லாம் தாமதமாகத்தான் நடக்கும். அதிகாரிகளுக்குப் பொறுப்புக் குறைவு. ஏதாவது தவறு ஏற்பட்டால் ஜனப்பிரதிநிதிகளின் பேரில் போட்டுவிடலாம். ஆனால் ஏதேச்சாதிகாரத்தில் இரண்டு பெரிய குறைகள் இருக்கின்றன. ஏதேச்சாதிகாரி சாமர்த்தியசாலியாகவும், சுயநல மற்றவனாகவும் இருப்பது நிச்சயமில்லை. ஒரு நல்ல ஏதேச்சாதிகாரி இறந்தால் பின்னால் வருபவன் அதே மாதிரி இருப்பான் என்பது நிச்சயமல்ல. இதை யோசித்தே முன் காலங்களில் நல்லவனாக விருந்தபோதிலும், கெட்டவனாகவிருந்தபோதிலும் அரசன் மகன் அரசனாக வேண்டுமென்ற நியமம் ஏற்படுத்தப் பட்டது. அப்பொழுது மந்திரிகளின் பொறுப்பு அதிகரித்தது. பல கெட்டிக்காரர்களுள் சிலரை மந்திரிகளாகச் செய்து கொள்ளச் சாத்தியமாயிற்று. இந்த மந்திரிகள் பெரும்பாலும் ஒரு சிறிய கூட்டத்தைச் சேர்ந்திருந்ததனால் அக்கூட்டம் நாட்டின் வேலையைத் திறம்பட நடத்தும்வரையில் இவ்வேற்பாடு சௌகரியமாகவிருந்தது. ஆனால் இக்கூட்டத்தாரோ சோம்பேறிகளாகவும், சுகப்பிரியர்களாகவும் சென்றுவிட்டால், சமூக வேலைகள் சீர் குலைந்துவிடுகின்றன.

கல்வியும் ஆண்மையும் நிரம்பிய நாட்டில் ஜனநாயகமே ஸ்திரமான ஆட்சிமுறையாகும். அப்பொழுதுதான் அக்கிரமங்களைப் புரட்சியின்றி தடுக்கலாம். முக்கிய அதிகாரிகள் இறந்துவிடுவார்களோ என்று கவலைப்படாமல் இருக்கலாம். நாட்டின் செல்வம் வீணாக விரயமாகாமல் தடுக்கலாம்.

3568

ஆனால் எந்த ராஜீய அமைப்பும் சமூக காரியங்கள் செய்வதற்குச் சாதனங்களே ஒழிய புருஷார்த்தமல்ல. சமாதானமும், தொழிலும் — செல்வப் பிரிவினையும் மற்ற சேவைகளும் சரிவர செய்யப்படாதபொழுது ஜனநாயகமிருக்கிறதென்று எந்த ஜனங்களும் திருப்தியடைய மாட்டார்கள். ஓட்டு ஒரு மந்திரமல்ல. ஓட்டர்களைச் சிறிதுகாலம் ஏமாற்றலாம். பெரும்பாலோர் தங்கள் பிரதிநிதிகளின் வேலையில் அதிருப்தி கொண்டுவிட்டால், ஜனநாயகத்தை விட்டுவிட்டு ஏதேச்சாதிகாரிகளுக்கு ஆதரவளிக்கத் தயங்கமாட்டார்கள்.

ஒரே சமூகத்திற்குச் சில வேளைகளில் ஏதேச்சாதிகாரமும் மற்ற காலங்களில் ஜனநாயகமும் அவசியமாக விருக்கலாம். பெரிய மாறுதல்களை ஏதேச்சாதிகாரத்தின் மூலம் செய்வது சுலபமானது. முக்கியமாகப் பண்டைக்காலத்திலிருந்து வரும் சமூக ஏற்பாடுகளையும், சொத்து முறைகளையும் ஜனநாயக மூலம் மாற்றுவது

மிகவும் சிரம சாத்தியமானது. சிறிய திருவாங்கூர் அரசாங்கூட ஒரே நாளில் எல்லாக் கோயில்களையும் ஹரிஜனங்களுக்குத் திறந்து விட்டது.

எந்தப் பெரிய காரியம் வேண்டுமானாலும் அதைப் பலர் எதிர்ப் பார்கள். அதனால் சிலருக்கு நஷ்டம் ஏற்படும். சிலர் அதன் கருத்தை அறியக்கூடாதவர்களாக இருப்பார்கள். பின் காலத்தில் யாரோ சுகப்படுவதற்காக நாம் ஏன் இப்பொழுது கஷ்டப்பட வேண்டும் என்பார்கள். இவர்களை எல்லாம் திருப்தி செய்வதற் காக ஜனநாயக அரசாங்கங்கள், ஒவ்வொரு விஷயத்திலும் கமிட்டி வைத்து விசாரிக்கின்றன. தாமதமாக விவாதித்து, நிச்சயமான முடிவுக்கு வராமல் முரண்பாடான சிபார்சுகள் செய்வது வழக் கம். இவைகளைப்பற்றி நெடுங்காலம் யோசித்து ஏற்றுக்கொள்ள முடியாதென்றால், மலையைக் கல்லி எலியைப் பிடித்ததுபோல் ஒரு அற்ப முடிவுக்கு வருவதே ஜனநாயக அரசாங்கங்களின் வழக்கம்.

பலர் சேர்ந்து ஒரு காரியத்தைப்பற்றி நன்றாகச் சிந்திக்க முடி யாது. பல அபிப்பிராயங்களை ஒரே மூளை ஆலோசித்து முடிவுக்கு வந்தால்தான் எக்காரியமும் திறம்படச் செய்யமுடியும்.

ஜனநாயகம், ஏதேச்சாதிகாரம் இரண்டின் தத்துவங்களையும் கலந்து ஒரு புதிய அரசியல் திட்டம் அமைக்க முடியுமானால் மிக வும் நன்மையாகவிருக்கும். கிராம சபைகள், நகர சபைகள் இவற் றிற்கெல்லாம். ஒரு தலைவனைத் தேர்ந்தெடுத்துவிட்டு எல்லாப் பொறுப்பையும் அவனிடம் கொடுத்து, காரியங்கள் கெட்டு விட் டால் அவனைத் தண்டனைக்குள்ளாக்கக் கூடுமானால் பஞ்சாயத்து களிலும், முனிஸிபாலிடிகளிலும் தற்போதைய ஊழல்கள் இருக்க மாட்டா. அமெரிக்காவில் பிரசிடெண்டுக்கு ஏறக்குறைய ஏதேச் சாதிகாரமிருக்கிறது. கக்ஷிக்கட்டுப்பாட்டினால் பிரிட்டிஷ் பிரதம மந்திரியும் அவசியமானபோது ஏதேச்சாதிகாரி யாகிறார். இந்தி யாவில் காங்கிரஸ் மகாசபை செல்வாக்குப் பெற்றதற்குக்காரணம் காங்கிரஸ் ஜனநாயக ஸ்தாபனமாக இருந்தும் மகாத்மா காந்தி யடிகளின் ஏதேச்சாதிகாரத் தலைமையை ஏற்றுக்கொண்டதே.

நமது மூளையைச் சுயநலத்திற்காக அடிமையாகச் செய்ய லாம். சுயநலத்தை அடக்கிப் பொதுநலத்தைத் தேடும் கருவியாக வும் செய்யலாம். சமூகத்தில் பெரும்பாலோர் மனதில் பொது நலப் பற்றுண்டாகி சுயலத்தைக் கடக்கப் பயிற்சி செய்துகொண் டால், அதிகாரிகளின் மூளையும் அவ்வழியில் வேலை செய்யும். எல் லோரும் தம் சுயநலத்தை நாடி, சில அதிகாரிகள் மட்டும் பரிசுத் தர்களாக இருக்கவேண்டுமென்பது அசாத்தியமாகும். ஜனங் களுக்குத் தகுந்த அரசாங்கமே கிடைக்குமென்ற வசனம் உண் மையே.

## தொழில்கள்

தேகப்பிரயாசையின் கௌரவத்தைப் பற்றிப் பிரசங்கங்கள் செய்யப் படுகின்றன. விவசாயம், குடிசைத்தொழில்கள், முத லிய அடிப்படையான தொழில்களின் பெருமையைப்பற்றி அவைக ளில் ஈடுபடாதவர் பேசுவது வழக்கம். பிறப்பாலும், படிப்பாலும்,

சமூக ஏற்பாடுகளாலும். தனக்குக் கிடைத்திருக்கும் வேலையைச் சரியாகச் செய்யவேண்டு மென்பதை எளிதில் ஏற்றுக்கொள்ளலாம். வெளிப் பார்வைக்கு எவ்வளவு பகட்டாகவிருந்தாலும், எத்தொழிலிலும் கஷ்டங்கள் இருக்கின்றன என்பதையும் ஒப்புக்கொள்ள வேண்டும். அக்னியில் புகை கிளம்புவதுபோல் மனிதன் செய்யும் எல்லாக் காரியங்களிலும் குறைகள் உண்டு என்று பகவத் கீதை கூறுகின்றது. ஆயினும் ஒரு தொழிலைத் தேடும் இளைஞனிடம் எல்லாத் தொழில்களும் சமம் என்று கூறுவதில் பிரயோசனமில்லை. அவசியம் தாரதம்மியம் இருக்கின்றது.

தொழிலிலிருந்து எதிர்பார்க்கும் லாபங்கள் (1) ஊதியம் (2) அதிகாரம் (3) செல்வாக்கு (4) ஆத்மதிருப்தி. பிறவிக்குணத்தால் ஒரு குறிப்பிட்ட தொழிலுக்கு விசேஷ ஆற்றல் பெற்று அத்தொழிலைத் திறமையாகச் செய்ய சௌகரியங்கள் கிடைத்த பொழுதே ஆத்ம திருப்தி உண்டாகிறது. விஞ்ஞான ஆராய்ச்சி, கவிதை, சங்கீதம், சிற்பம், யந்திர நிர்ணயம் முதலிய தொழில்களை எல்லோரும் எடுத்துக்கொள்ள முடியாது. ஜன்மாந்திர கர்மத்தாலோ கடவுளாலோ பிரத்யேகமான சக்தி பெற்றவர்கள்தான் இத்தொழில்களில் ஈடுபடமுடியும். கடவுள் என்ன சக்தி கொடுத்தபோதிலும் சமூக ஏற்பாட்டின்படி இவர்கள் தமக்குரிய தொழிலில் ஊதியமும் செல்வாக்கும் பெற முடியாவிட்டால் வாழ்க்கை நஷ்டமாகிவிடுகிறது ராமானுஜம் கணித சாஸ்திர மேதாவியாகவிருந்தும் தன் உணவிற்காக குமாஸ்தா வேலை செய்தார். சர். சி. வி. ராமன் விஞ்ஞான ஆராய்ச்சிக்குப் பிறந்திருந்தும் உபயோகமற்ற சர்க்கார் உத்தியோகத்தில் பல வருஷங்கள் கழித்தார்.

இயற்கைச் சக்திபெற்று அதை உபயோகிக்க வசதிகளில்லாமல் படும் கஷ்டத்தைவிட அவ்விதத் திறமையின்றி தொழில்களில் புகுவோரின் நிலைமை மிகவும் மோசமானது. இக்காலங்களில் விஞ்ஞான ஆராய்ச்சிக்குப் பல தேசங்களில் நல்ல ஊதியம் கொடுக்கப்படுகிறது. இதற்கு ஆசைப்பட்டு ஆற்றலில்லாத இளைஞர்கள் சிபார்சினாலும், குடும்பச் செல்வாக்கினாலும் இந்த ஸ்தானங்களைப் பெற்று, அதை எப்படி வகிப்பது என்று மூளையைக் கலக்கிக்கொண்டு அவஸ்தைப்படுகின்றனர். மற்ற பாஷைகளில் பிரசுரிக்கப்படும் புத்தகங்களிலிருந்து சில விஷயங்களை எடுத்துச் சிறிது மாற்றித் தாம் புதிதாகக் கண்டு பிடித்ததாகப் பட்டம் பெற முயலுகின்றனர். சரித்திர ஆராய்ச்சியின் பெயரால் பழைய ஸ்தல புராணங்களையும், கட்டுக் கதைகளையும் வைத்து ஏதாவது எழுதுகின்றனர். அனாவசியமாகப் பழைய புத்தகங்களிலிருக்கும் பதங்கள், பாட்டுக்கள் முதலியவற்றைக் கணக்கிட்டு ஏதோ முக்கிய விஷயங்களைக் கண்டு பிடித்ததுபோல் பாசாங்கு செய்கின்றனர். ஆதலால் விஞ்ஞான ஆராய்ச்சிக்கு அதிக ஊதியம் கொடுப்பதும் ஆபத்தாகத் தோன்றுகிறது.

இயற்கை பெரும்பாலோருக்கு, விசேஷ சக்திகளைக் கொடுப்பதில்லை. பயிற்சியால் எத்தொழிலையும் செய்யக் கூடியவர்களாக இருக்கிறார்கள். அவர்கள் முடிவில் செய்ய வேண்டிவருகிற தொழில் சமூக ஏற்பாடுகளையும், அதிர்ஷ்டத்தையும் பொறுத்

திருக்கிறது. தானாக விரும்பி அத்தொழிலில் சேரவில்லை என்ற வருத்தம் ஆயுள் முழுவதும் இருந்து வருகிறது. தம் தொழிலில் அதிகப் பற்று இருப்பதில்லை. அதனால் கிடைக்கும் பணமும், கௌரவமுமே முக்கியமாகிவிடுகின்றன. தொழில் செய்யும் நேரம் போக மீதி நேரமே தன் வாழ்க்கையாக எண்ணுகிறார்கள். இதை வீணாக்கக் கூடாதென்று எதைச் சாப்பிடலாம், எவ்விதம் சந்தோஷப்படலாம் என்ற சிந்தையிலாழ்கிறார்கள். இவர்கள் தேடும் ஆனந்தம் கானல் நீரைப்போல் தூரத்தில் தென்படுகிறதே யொழிய கிட்டுவதில்லை.

காதலித்து விவாகம் செய்து கொள்ளுவது போலவே தன் னிஷ்டமுள்ள தொழில் கிடைப்பதும் துர்லபம். வாலிபனுக்குப் பொதுவாக அழகான கெட்டிக்காரப் பெண் வேண்டுமென்று தான் தெரியும். முடிவில் தனக்குக் கிடைத்த பெண்ணிடம் பல குறைகளிருப்பதை அறிகிறான். பணமிருந்தால் கூடிய வரையில் மனதைச் சமாதானப் படுத்திக்கொண்டு தாம்பத்தியமாக நடத்து கிறான். தொழிலும் அப்படியே. பள்ளிக்கூடத்து மாணவனை உனக்கு சர்க்கார் உத்தியோகம் வேண்டுமா, வைத்தியனாக விருப் பமா, வக்கீல் வேலை செய்கிறாயா என்று கேட்பது வீண். எல்லா வேலைகளும் நல்லதாகத் தோன்றுகிறது. ஒன்று கிடைத்தால் மற்றொன்றுக்குப் போகவில்லையே என்ற வருத்தமுண்டாகிறது. நல்ல ஊதியம் கிடைத்தால் ஏதோ அதிர்ஷ்டம் என்று மனதைத் திடப்படுத்திக்கொண்டு காலம் தள்ளுகிறான்.

### சர்க்கார் உத்தியோகம்

எல்லா இளைஞர்களும், அவர்களுடைய பெற்றோர்களும் சர்க்கார் உத்தியோகத்திற்கு ஆசைப்படுவதில் அதிசயமில்லை. மாதா மாதம் தவறாமல் சம்பளம், ஸ்திரமான உத்தியோகம், பொறுப்பின்மை, முடிவில் பென்ஷன். இவை யாருக்குத்தான் பிடிக்காது? சமூகத்திலுள்ள எல்லாத் தொழில்களையும் சர்க்கார் தொழிலாக்கி எல்லோரையும் சர்க்கார் உத்தியோகஸ் தர்களாக்குவதே பொதுவுடைமை. ஏறக்குறைய இக் கொள்கை யையே நாஜி, பாஸிஸ்ட் கட்சிகளும் ஏற்று நடக்கின்றன. இதனால்தான் தொழிலுக்கும் கூலிக்கும் தாளம்போடும் ஜனநாய கத்தைக் காட்டிலும் இந்த ஏதேச்சாதிகாரர்களுக்குச் செல்வாக்கு வளர்ந்துவிட்டது.

சர்க்கார் உத்தியோகத்தில் பல நன்மைகள் இருக்கின்றன. ஒருவனுக்குப் பெரிய உத்தியோகம் கிடைத்துவிட்டால் அவன் மிகவும் அதிர்ஷ்டசாலி என்று சொல்லவேண்டும். சம்பளம் உயர உயர வேலையும் குறைவு. இஷ்டப்படி வேலை செய்யலாம். கேள்விமுறை கிடையாது. தன் பிள்ளைகளுக்கும் சொந்தக்காரர் களுக்கும் வேலைசெய்துவைக்கலாம்.

ஆனால் ஒரு பெரிய குறைமட்டும் இருக்கிறது. கொலை செய்த வனுக்குத் தூக்குத் தண்டனை இல்லாவிட்டால் ஜன்மாந்திர சிறை தண்டனை கொடுக்கிறார்கள். நடைமுறையில் அவனுக்கு 14 வருஷங்களுக்குப் பிறகு விடுதலையுண்டு. சர்க்கார் உத்தி யோகம் இரண்டு ஜன்மாந்திர சிக்ஷையாக இருக்கிறது. ஒருவன் ஆயுளில் முக்கியமான முப்பது வருஷங்களுக்கு ஒரு உபயோக

மற்ற வேலையை விடாமல் செய்யவேண்டியிருக்கிறது. பத்திரங்களை ரிஜிஸ்டர் செய்வது சமுகத்திற்கு அவசியம்தான். ஆனால் இருபது வயதிலிருந்து ஐம்பது வயது வரையில் மற்றவர்கள் எழுதும் பத்திரங்களுக்கு முத்திரைபோடுவதில் என்ன சந்தோஷம் அடைய முடியும்? கடிதங்களை டைப் செய்தும், அவைகளை பைல் செய்து அட்டவணை ஜோடித்தும், ஸ்டாம்புகளை விற்றும் தம் வாழ்வை பெரும்பாலான சர்க்கார் உத்தியோகஸ்தர்கள் கழிக்கின்றனர். நாளாக நாளாக அவர்கள் அலுப்பினாலேயே உயிரை வெறுக்கும் நிலைமைக்கு வந்துவிடுகின்றனர். பெரிய உத்தியோகமும் உயர்ந்த சம்பளமும் இருந்தால் பலவித சௌகரியங்களாலும் விநோதங்களாலும் இந்த அலுப்பைத் தீர்த்துக் கொள்ளலாம். ஆனால் அவர்களுக்கு வாழ்க்கை சாரமற்றுப்போய்விடுகிறது. பெரிய உத்தியோகஸ்தர்களை வீடுகளிலும் காரியாலயங்களிலும் உற்றுக் கவனித்தால் அவர்களுக்குத் தங்கள் வேலையிலிருக்கும் அருவருப்பு நன்கு புலப்படும்.

ஆதிமுதற் கொண்டே ஒவ்வொருவரையும் இரண்டு மூன்று தொழில்களுக்குத் தயார் செய்து நாலைந்து வருஷத்திற்கு ஒருதரம் மாற்றிக்கொண்டிருந்தால் வாழ்வின் ருசி அதிகரிக்கும். கட்டாயமாக ராணுவப்பயிற்சியும், யுத்தமும் சமூகத்திற்கு நஷ்டம் விளைவித்த போதிலும், சாதாரண வாழ்க்கையின் அலுப்பைத் தீர்ப்பதால் சந்தோஷத்துடன் ஏற்றுக்கொள்ளப்படுகின்றன.

## வக்கீல்

முப்பது வருஷங்களுக்குமுன் உலகமெங்கும் வக்கீல் தொழிலே மிகவும் மேலானதாகக் கருதப்பட்டு வந்தது. வருமானத்திலும், செல்வாக்கிலும் உயர்ந்திருந்தது. இந்தியாவிலேயே ராஜீயத்திலும், சமூகச் சீர்திருத்தத்திலும் மற்றும் பல சமூகத் துறைகளிலும், வக்கில்களே தலைவர்களாக விளங்கினர்கள். இப்பொழுது இதெல்லாம் முற்றிலும் மாறிவிட்டது. வக்கீல்களின் சகாப்தம் முடிவடைந்துவிட்டது.

எவ்வளவு நியாயமான அரசாங்கமானாலும் சட்டத்தைப் படித்து அதை வழங்கும்படி செய்ய வக்கீல்கள் வேண்டும். வக்கீல்கள் வாதிக்காமல் நியாயாதிபதிகள் நியாயம் செய்ய வேண்டுமென்பது லஞ்சத்திலும், அக்கிரமத்திலும்தான் முடியும். ஆதலால், வக்கீல் தொழிலை அனாவசியம் என்றும், பிறரை ஏமாற்றிப் பிழைக்கும் தொழிலென்றும் திட்டுவது மூடத்தனம்.

ஆயினும் இத்தொழில் ஒரு பெரிய தேச சேவையென்றும், அதைச் செய்பவர்கள் புத்தியிலும் சாமர்த்தியத்திலும் உயர்ந்தவர்கள் என்றும் ஒரு காலத்தில் எண்ணப்பட்டது தவறு. வக்கீல் வேலை செய்வதற்கு விசேஷ புத்திக் கூர்மை வேண்டியதில்லை. சாதாரண சாமர்த்தியம், ஆரம்பத்தில் கொஞ்சம் பணம், அத்தொழில் புரியும் பந்துவின் உதவி இவை இருந்தால் போதும். பிறகு வக்கீலின் சாமர்த்தியம் வருமானத்திலிருந்தே அனுமானம் செய்யப் படுகின்றது. மாதம் ஆயிரக்கணக்காக சம்பாதிக்கும் வக்கீல்கள் சொந்த வீட்டுக்காரியங்களிலும், பொது விஷயங்களிலும் திறமையற்றிருப்பதை அடிக்கடி காண்கிறோம்.

பொதுவாக வக்கீல் தொழில் சமூக நன்மைக்கு அவசியமா யிருந்தபோதிலும் எந்த வக்கீலும் தான் கேஸ்களால் நேரில் சமூக சேவை செய்பவனுகிருனென்று எண்ணமுடியாது. தனக்கு லாபம் கிடைக்கிறது. சீட்டாட்டத்தைப் போல ஒரு குதூகலம் உண்டாகிறது. அவ்வளவுதான். நியாயத்தைப் பற்றிச் சிந்திப்பது வக்கீல் பொறுப்பல்ல. கருப்பன் செட்டியாருக்கும் சரி, அவருக்கு விரோதமான சுப்பையா செட்டியாருக்கும் சரி, யார் வக்காலத்து கொடுக்கிருரோ அவருக்கு ஆஜராக வேண்டியதுதான். முன் காலங்களில் பல க்ஷத்திரிய வீரர்கள் தமக்குப் பணம் கொடுப் போர்களுக்காகச் சண்டை செய்தனர். இந்நாட்களில் உள் நாட் டுச் சண்டை, கோர்ட்டுகளில் கேஸ்கள் மூலமாக நடக்கின்றன. பழைய கூலிக்கார சிப்பாய்கள் இப்பொழுது வக்கீல்களாக அவ தரித்திருக்கிருர்கள்.

பொதுவாக வக்கீல்கள் பலரோடு பழகி புதிய புதிய சம்பவங் களைப் பரிசிலனை செய்வதால் தங்கள் தொழிலில் அதிக அலுப்புத் தோன்றுவதில்லை. திடகாத்திரர்களாக இல்லாமற் போனுலும் வக் கீல்கள் நீண்டகாலம் ஜீவித்திருப்பதாகக் கணக்கிடப்பட்டிருக் கிறது.

### டாக்டர்

வைத்தியத் தொழிலில் இரண்டு பெரிய குணங்கள் இருக் கின்றன. பிரத்தியக்ஷமாகக் கஷ்டப்படும் மனிதனுக்கு உதவி செய்வதாலுண்டாகும் சந்தோஷம் ஒன்று. தொழிலில் சுமாரான சாமர்த்தியமிருந்தால் வேலைக்குக் குறைவில்லை. வருமானம் நோயாளிகளின் நிலைமையைப் பொறுத்திருந்தாலும் ஏதோ கிடைத்துவிடும்.

பிரத்யேகமான கஷ்டங்களுமுண்டு. மனதாரப் பொய் சொல்லவேண்டும். 'உனக்கு இந்த வியாதி என்னவென்று தெரியவில்லை' என்று கூசாமல் சொல்லும் டாக்டர்கள் வெகு சிலரேயிருப்பார்கள். சிலவேளை நோயாளிகளின் பேரில் கருணை கொண்டும் பொய் சொல்லவேண்டும். 'இனி பிழைக்கமுடியாது. உயிலை எழுதி வீட்டாரிடம் விடைபெற்று தெய்வத்தை நினைத் துக்கொள்' என்று சொல்லுவது நியாயமாயினும், எப்படி டாக் டர் மனதாரச் செய்யமுடியும்? அடிக்கடி நோயை மிகைப்படுத்தி யும், மறைத்தும் பணம் சம்பாதிக்கவேண்டியிருக்கிறது.

மற்றத் தொழில்கள் எப்படியிருப்பினும் வைத்தியவேலை அவ சியம். சமூகத் தொழிலாகச்செய்வது அவசியம். நோயாளி எதி ரில் நிற்கும்பொழுது அவனிடம் பணமிருக்கிறதா, அவனை எவ்வளவு கேட்கலாம் என்று நினைப்பதே மனிதத்தன்மைக்குக் குறைவாகும். ஆனல் நோயாளிகளிடமிருந்து வசூல் செய்து பிழைக்கவேண்டு மானுல், முன்னுலேயே கருராகப்பேசிப் பிறகு வைத்தியம் செய் வதே முறையாகும். வைத்தியம் செய்து விட்டுப் பிற்பாடு டாக் டர் நூறு ரூபாய் கேட்க நோயாளி பத்து ரூபாய் கொடுக்க மனஸ்தாபப்படுவது நியாயமன்று.

ஒருதரம் படித்துவிட்டுப் பின்பு ஆயுள் முழுவதும் தொழில் செய்வது முன்காலத்திற்குச் சரியாகவிருந்திருக்கலாம். அது இக் காலத்திற்கு ஒவ்வாது. முக்கியமாக வைத்தியத் தொழிலுக்குப்

பாருந்தாது. வருஷந்தோறும் புதிய சிகிச்சை முறைகளும் கருவிகளும் கண்டுபிடிக்கப்படுகின்றன. இவைகளை ஒவ்வொரு டாக்டரும் தனியாகப் படிக்க வேண்டுமென்பது சாத்தியமானதல்ல. பத்து வருஷங்களுக்கு ஒரு முறை ஆறுமாதமோ, ஒரு வருஷமோ புதிய முறைகளைப் பழைய டாக்டர்களுக்குக் கற்பிக்க ஏற்பாடு செய்யவேண்டும்.

மேனாட்டு வைத்தியம் மேலா, ஆயுர்வேதம் உயர்ந்ததா என்ற வாதம் நம் நாடு இருக்கும் மூட நிலைமைக்குச் சான்றாகும். வராக மிசிராவின் கணிதம் உயர்ந்ததா, மேனாட்டு கணிதம் உயர்ந்ததா என்று கேட்பவனைப் பைத்தியக்காரனென்றே சொல்லுவோம். கணித சாஸ்திரம் ஒன்றே. கணிதத்தை நூதன முறையில் அதிக நுட்பமாக இக்காலத்து கணித சாஸ்திரிகள் செய்வதால் வராக மிசிராவிற்கு எவ்வித அகௌரவமுமில்லை. நூற்றுக்கணக்கான வருஷங்களுக்கு முன்னதாகவே அவர் சிக்கலான கணித தத்துவங்களைக் கண்டுபிடித்ததற்குப் பெருமைகொண்டு, தற்போதைய உபயோகத்திற்கு இக்காலத்திய முறைகளையே ஏற்றுக்கொள்கிறோம். ஆயுர்வேதத்தையும் இவ்விதமே செய்யவேண்டும். ஆயுர்வேத மருந்துகளை நன்கு ஆராய்ச்சி செய்து, உபயோகமானவைகளை ஏற்றுக்கொண்டு, உடல் பரிசிலனை, நோய் நிர்ணயம், சிகிச்சா தத்துவம், ரத்த பரிசை, ரண சிகிச்சை இவற்றிலெல்லாம் நூதன முறைகளை ஏற்றுக்கொள்ளவேண்டும்.

### உபாத்தியாயர்

பொதுக்கூட்டங்களிலும், சட்ட சபைகளிலும் உபாத்தியாயர் வேலையைப் புகழ்வது வழக்கம். வீட்டில் தனிமையாக அப்பிரசங்கியைப் பார்த்து 'நீ உபாத்தியாயர் ஆகப்போகிறாயா?' என்று கேட்டால் நடுங்குவான். தாய் குழந்தைகளை வளர்ப்பதில் எவ்வளவோ கஷ்டங்களும் அலுப்பும் உண்டாகிறது. ஆனால் குழந்தைகள் வளர்ந்து கொண்டேயிருக்கிறார்கள். சில வருஷங்களில் பெரியவர்களாகி விடுகிறார்கள். குழந்தைகள் வளராமல் ஒரே வயதில் இருந்தால் எந்தத் தாயாருக்கும் பயித்தியம் பிடித்துவிடுமல்லவா? அதே வயது பிள்ளைக்கு அதே பாடங்களை வருஷா வருஷம் கற்றுக் கொடுக்கும் தொழில் கொடிய தண்டனை போலாகும்.

ஒரு தலைமுறை தாய் தந்தையர்களுக்கு நன்றாகக் கல்வி போதித்த பிறகு ஆரம்பக் கல்வியை அவர்கள் பொறுப்பிலேயே விட்டுவிடக் கூடாமல் லக்ஷக்கணக்கான உபாத்தியாயர்கள் ஆரம்பப் பள்ளியில் அவஸ்தைப்பட வேண்டியதில்லை. இக்காலங்களில் ரேடியோ, சினிமா, முதலியவற்றின் மூலமாக சுகாதாரம், சரித்திரம் முதலிய பாடங்கள் எளிதில் சுவாரஸ்யமாகக் கற்றுக்கொடுக்கலாம். எழுதப் படிக்கவும் கூட்டல் கழித்தல் பெருக்கல் வகுத்தல் கணக்குப் போடவும் வீட்டில் சுலபமாகக் கற்பிக்கலாம். தேகாப்பியாசம், கைத்தொழில், சங்கீதம் முதலியவற்றைக் கற்றுக் கொடுக்கவே ஊர்தோறும் ஏற்பாடுகள் செய்யவேண்டும்.

மத்தியதரப் பள்ளிக்கூடங்களிலும் நாலைந்து வருஷத்திற்கு மேல் எந்த உபாத்தியாயரும் வேலை செய்யக்கூடாது. காலேஜிலிருந்து பாஸ் செய்த இளைஞர்களுக்கு அனுபவம் குறைவாக விருப்

பினும் உற்சாகம் அதிகமாகவிருக்கும். அதுதான் மற்றவர்களுக்குக் கற்றுக் கொடுப்பதற்கு முக்கியமானது. அதனல் உபாத்தியாயருக்கும் தான் கற்ற கல்வி சிறிது திடமாக மனதில் பதியும், பொறுமையும் உண்டாகும். அலுப்பு ஏற்பட்டவுடன் வேறு வேலைக்கு அனுப்பிவிட வேண்டும். குமாஸ்தா முதலிய வேலைகளுக்குக் கொஞ்சம் வயதானவர்களை எடுத்துக் கொள்வதே நலம். ஆதலால் குறைந்தது ஐந்து வருஷம் உபாத்தியாயர் வேலை செய்தவர்களே குமாஸ்தாக்களாகலாம் என்று நியமம் ஏற்பட்டால் இரண்டு தொழிலுக்கும் நல்லது.

காலேஜ்களில் உபாத்தியாயர்கள் நேரில் சொல்லிக் கொடுக்கலாகாது; மாணவனே படிக்கவேண்டும்; ஆசிரியர்கள் அவன் சந்தேகங்களைத் தீர்த்துச் சில நுட்ப விஷயங்களைப் பற்றிப் பிரசங்கம் செய்யவேண்டும். இந்த எண்ணம் பெருகுகிறது. அப்படியானல் காலேஜ் ஆசிரியர்களுக்கு ஒரு வேலையும் இராது என்று சொல்லலாம். உண்மையில் பல காலேஜ்களில் இப்படித்தான் இருந்து வருகிறது. ஆனல் ஆராய்ச்சிக்கு ஆற்றலும் விருப்பமும் உள்ளவர்களையே காலேஜ் ஆசிரியர்களாக நியமிக்கவேண்டும்.

## எழுத்தாளர்

கட்டாயக் கல்வி அதிகரித்து வருவதால் பத்திரிகை புஸ்தக வியாபாரம் மிகவும் வளர்ந்து வருகிறது. எழுத்தாளர்களின் சங்கியையும் பெருகிவருகிறது. இங்கிலாந்து, அமெரிக்கா முதலிய நாடுகளில் லக்ஷக்கணக்கான பேர்கள் இத்தொழில் புரிந்து ஜீவனம் செய்கிறர்கள். ஏராளமாகச் சம்பாதிக்கிறர்கள். சம்பாத்தியம் எப்படி இருப்பினும் இத்தொழிலில் ஒரு பெரிய மோகம் இருக்கிறது. மற்ற தொழில்களில் உயர்ந்த ஸ்தானம் பெற்றவர்கள்கூட எழுத்தாளர்களாக வேண்டுமென்று ஆசைப்படுகிறர்கள்.

பொதுவாக ஒவ்வொரு எழுத்தாளருக்கும் இரண்டு நம்பிக்கையுண்டு. தான் எழுதுவதெல்லாம் மிகவும் சிரேஷ்டமானது. மற்றவர்கள் எழுதுவதில் அவ்வளவு சுவாரஸ்யமில்லை. தன்னை மற்றவர்கள் புகழ்ந்தால் புத்திசாலிகள். இகழ்ந்தால் மூடர்கள். இந்த அகம்பாவமில்லாவிடில் எழுதுவது கஷ்டம்.

பத்திரிகாசிரியர்கள் எல்லா விஷயங்களைப் பற்றியும் எழுதுவதைக்கண்டு பலர் பிரமிப்பார்கள். ஆனல் அதில் வேலை செய்பவர்களுக்கு அதன் சூக்ஷமம் தெரியும். தன் அறியாமையை வெளியிற்காட்டாமல் வேறு புஸ்தகங்களிலிருந்து ஒன்று இரண்டு சமாசாரங்களை எடுத்துப் பல வார்த்தைகளில் ஜோடித்து சர்வக்ஞர்போலப் பாசாங்கு செய்யும் சாமர்த்தியத்தைப் பயிற்சி செய்து கொள்ளுகிறர்கள். ஒவ்வொரு பத்திரிகையும் பொது ஜனத்தின் பேரில் தான் எழுதுகிறது. ஆனல் இந்தப் பொதுஜனம் பத்திரிகாலயத்தின் தலையில் கையை வைத்துக்கொண்டு மூளையைக் குழப்புகின்ற ஒரு ஆசாமி தான்.

கதை எழுதுவது ஒரு பெரிய தொழிலாகிவிட்டது. பல இளைஞர்கள் ஓயாமல் யாரை யாருக்கு விவாகம் செய்வது, எவரை எப்படிக் கொல்வது என்று மூளையைக் கலக்கிக்கொண்டு இருக்கின்றனர். அந்தக் கதைகளைப் படித்து சந்தோஷப்படுவோர்களும்

ர்களுக்கு நாள் அதிகரித்து வருகின்றனர். இதனால் மற்ற புஸ்தகங்களெல்லாம் சாரமற்றவையாகத் தோன்றுகின்றன. பெரிய ஆசிரியர்கள் மனித சொரூபத்தையும், சமூகப் பிரச்னைகளையும் பற்றித் தங்கள் சிந்தனைகளை இக்கதைகள் மூலம் வெளியிடுவது உண்மையாயினும், நாவல்களில் கற்பனை செய்யப்படும் ஒவ்வொரு பாத்திரத்தையும் உண்மையாகப் பாவித்து நீண்ட விமர்சனம் செய்யும் வழக்கம் வளர்ந்து வருகிறது. இவ்வித விமர்சனமும் தனித் தொழிலாகி ஆசிரியர்கள் விமர்சகர்களுக்கு நடுங்குகிறார்கள்.

முன்னாட்களில் நூல்கள் எழுதுவது ஆசிரியர்களின் உற்சாகத்தையே பொறுத்திருந்தது. இப்பொழுதோ, புத்தகப் பிரசுராலயங்களின் தூண்டுதலே முக்கியமாகிவிட்டது. பெரிய முதல் போட்டு அச்சாபீஸ்களும், பிரசுராலயங்களும் ஏற்படுத்திவிட்டால் ஓயாமல் புதுப் புஸ்தகங்கள் வெளி வந்தாலொழிய முதலுக்கு லாபம் கிடைக்காது. ஆதலால் புத்தகத் தொழிலும், மோட்டார், துணி, சாயம் இவற்றைப் போன்று பெரிய வியாபாரமாகிவிட்டது. நல்ல ஆசிரியர்களுக்கு இதனால் அதிக வசதிகள் கிடைத்த போதிலும் காமத்தைப் பெருக்கியும், ஜாதி சமூக வித்தியாசங்களை வளர்த்தும் நிலைகளை விருத்திசெய்து பிழைக்கும் எழுத்தாளர்களுக்குத் தான் அதிக கிராக்கி உண்டாயிருக்கிறது.

### யந்திரத் தொழிலாளிகள்

மற்றத் தொழில்களைவிட யந்திரத் தொழில்களே இக்காலத்து நாகரீகத்திற்கு அடிப்படையானவை. ஆதலால் எஞ்ஜினீயர்களும், இயந்திரங்களைச் செய்வோர்களும், அவைகளை ஓட்டுவோர்களும் வருங்காலத்தில் மிகவும் செல்வாக்குள்ளவர்களாவார்கள். தங்கள் தொழில்களில் திறமை வாய்ந்திருப்பினும், இவர்களில் பலருக்குப் பரந்த அறிவு துர்லபம். ஆதலால், பொது அறிவும், இயந்திர ஞானமும் சேர்ந்து போதிப்பது கல்வி முறையின் முக்கிய உத்தேசமாக இருத்தல் வேண்டும்.

### முடிவு

முன் அத்தியாயங்களிலிருந்து இரண்டு தத்துவங்கள் புலப்படுகின்றன. மனித சமூகத்தின் காரியங்களுக்கெல்லாம் ஆதாரம் பகுத்தறிவு. ஆனால் இப் பகுத்தறிவால் எதையும் நிச்சயமாக அறியமுடியாது. அதன் முடிவுகளெல்லாம் சந்தேகத்தோடு கூடியதாகவேயிருக்கும். பிரத்தியக்ஷ ஞானத்திற்கும் சிந்தனையால் கிடைக்கும் அறிவிற்கும் இதுவே முக்கிய வித்தியாசம். கனவாகவிருந்தபோதிலும் கனவுகாணும்வரையில் அதில் சந்தேகம் தோன்றுவதில்லை. மற்றப் பிராணிகளின் சேஷ்டைகளெல்லாம் ஒருவித பிரத்தியக்ஷ ஞானத்தால் நடக்கின்றன. புலிக்கு ஆட்டைப் பார்த்து அதனைப் புசிக்கலாமாவென்ற ஐயம் ஏற்படுவதில்லை. தம் தம் காரியங்களைத் திறம்படச் செய்கின்றன. ஆனால் அவைகளால் செய்யக்கூடிய காரியங்களுக்கு நிச்சயமான வரம்புகள் உண்டு. மனிதனுக்கோ அவ்வித வரம்புகள் இல்லை. விமானத்தில் பறக்கிறான். பஞ்சபூதங்களையும் தன் அடிமையாகச் செய்துகொள்ளுகிறான். ஆயினும் அவன் எக்காரியத்தைச் செய்தாலும் இரண்டு சந்தேகங்கள் எழும்பிக்கொண்டேயிருக்கின்றன. 'என்னுடைய

அறிவு உண்மையானதா? என்னுடைய காரியம் தர்மமா?" அவ்வப்போது தாற்காலிகமான முடிவுகள் செய்துகொண்டு காரியங்களை நிர்வகிக்க வேண்டியிருக்கிறது. இந்தத் தாற்காலிக முடிவுகளைச் சாசுவதமென்று நினைத்துவிட்டால் அவன் வளர்ச்சி குறைந்து மனிதத் தன்மையையும் இழந்துவிடுகிறான்.

மற்ற பிராணிகளுக்கு வாழ்க்கை ஒரு நிச்சயமான ரஸ்தாவாக இருக்கிறது. மனித மார்க்கத்திலோ அடிக்கடி நாற்சந்தி குறுக்கிடுகிறது. எந்தக் கிளை வழியில் போகவேண்டுமென்று தீர்மானிக்கவேண்டியிருக்கிறது. ஒவ்வொரு கிளை வழியிலும் பல அதிசயங்கள் தென்படுகின்றன. கஷ்டங்களும் காணப்படுகின்றன. வெவ்வேறு வழிகளில் மனிதர் செல்வது ஆச்சரியமில்லை. இதுவே மனித வாழ்க்கையின் விசித்திரத்திற்குக் காரணம்.

இதனால் எல்லா வழியும் ஒன்று; அறிஞனுக்கும் மூடனுக்கும் பேதமில்லை; தர்மத்திற்கும் அதர்மத்திற்கும் வித்தியாசமில்லை என்று எண்ணுவதும் தவறாகும். எத்தராசிலும் சிறிது கோணல் இருக்கும். ஆனால் கூடியவரையில் இரு தட்டும் சமமாக இருக்க வேண்டும் என்று நம்புகிறோம். அப்படியே உண்மையிலும், தர்மத்திலும் பகுத்தறிவுள்ள மனிதன் சாதாரணமாக இரண்டு அனுமானங்களுள் எது மேலானதென்று நிச்சயம் செய்ய முடியும். இரண்டு தர்மங்களுள் எது உயர்ந்ததென்று தீர்மானம் செய்ய முடியும். அம் மேலான முடிவையும், அந்த உயர்ந்த தர்மத்தையும் நாடினால் போதுமானது.

உண்மையை மறைப்பது அநியாயம் மட்டுமல்ல. அதன்பேரிலுள்ள அபிமானமும் பெரிய தடையாகவிருக்கின்றது. இந்த அபிமானம் சாதாரண மனிதர்களைக்காட்டிலும் படித்தவர்களிடமே பெரிதும் காணப்படுகிறது. அசிந்திய பிரமத்தைப்பற்றிப் பலர் பலவாறு சிந்திப்பது சகஜமல்லவா? ஆயினும் அதன் சொரூபத்தைப்பற்றிப் பெரிய ஆசாரியர்கள் தம் எண்ணங்களை முடிவான தத்துவங்களாகப் பிரசாரம் செய்ததுமன்றி மற்ற அபிப்பிராயங்களெல்லாம் மூடத்தனமென்று பலமாகக் கண்டித்திருக்கின்றனர். சொத்தின்பேரில் எவ்வளவு பற்று ஏற்படுகின்றதோ அதே மாதிரி நமது எண்ணங்கள் கற்பனைகள் மீதும் ஏற்படுகின்றன. ஓரளவு இப்பற்று இருந்தே தீரும். இல்லாவிட்டால் பெரிய ஆராய்ச்சிகளில் ஒருவரும் புகமாட்டார்கள். ஆனால் அதை மிதமிஞ்சி வளரவிட்டால் பெரிய அனர்த்தமுண்டாகும்.

அவ்வாறே தர்மத்தை மறைப்பது பழக்கம் மட்டுமல்ல. சுயநலமே பெரிய விரோதி. பரம்பரையாக வரும் வழக்கங்களைத் தர்மமென்று எண்ணுவது சகஜமாயினும் அவற்றின் தவறுகளை மற்றவர் எடுத்துரைக்கும் பொழுது சுயநலம் தடுக்காவிட்டால் எளிதில் மாற்றிக்கொள்ளலாம். ஹரிஜனங்கள் கோயிலில்போனால் ஈச்வரன் சான்னித்தியம் குறையுமென்று அபிப்பிராயம் இருப்பது உண்மையாயினும், கோவில்களுக்குச் சொத்து, சம்பள உத்தியோகஸ்தர்கள் முதலிய லௌகிக பந்தங்கள் இல்லாவிட்டால் தீண்டாமையை ஒழிப்பது சுலபமாகும். சுயநலத்தை ஒழித்து பழைய சம்பிரதாயங்களைப்பற்றிச் சிந்திக்கத் தர்மவழி நாடுகிறான் என்று கூறலாம்.

பகுத்தறிவின் பலனாக மனிதன் உலக நாடகத்தில் ஒரு பாத்திரனாக இருப்பதுமட்டுமன்றி அதன் சாக்ஷியுமாகின்றான். பாத்திரன் என்ற ஹோதாவில் தன் சிறிய காரியங்கள் மிகவும் முக்கியமானதாகத் தோன்றும். சாக்ஷி என்ற ஹோதாவில் எல்லாம் ஒரு கற்பனை நாடகமாகத் தோன்றும். அறிவு வளர வளர நாடகத்தினின்று விலகிநின்று அதன் ரஸத்தை அனுபவிக்கும் ஆற்றல் விருத்தியாகின்றது. ஆனால் தன்னுடைய சொந்த வேஷத்திலும் ஆட்டத்திலும் சந்தேகம் ஏற்படுகின்றது. தன்னைத்தானே பரிகாசம் செய்துகொள்ளும் அபூர்வ சக்தியும் பிறக்கிறது. தன் காரியங்களில் சிந்தனைகள், உணர்ச்சிகள் எல்லாவற்றிலும் பொய்யும் மெய்யும் கலந்திருப்பதைக் கண்டு சிலவேளை வருத்தமும் மற்ற வேளைகளில் மகிழ்ச்சியும் அடைகிறான்.

இவ்வாறு சந்தேகத்தை வளர்க்கும் அறிவினால் என்ன பிரயோசனம்? சுகத்தைக் கெடுத்துத் துக்கத்தைப் பெருக்குமல்லவா என்று கேட்கலாம். வாழ்க்கையின் லக்ஷியம் சுகம் என்று நினைப்பவர்கள் பாலர்களே. அப்படியானால் அதன் முடிவு சாவாக இருக்காது. பூவின் மணம் அதன் புருஷார்த்தமல்ல. பிஞ்சுவிட்டுக் காய் காய்த்துப் பழுத்து விதை உற்பத்தி செய்வது அதன் முக்கிய லக்ஷியம். அவ்வாறே சுகதுக்கங்கள் வாழ்க்கையின் வாசனைகளேயாவன. ஒவ்வொரு ஜீவனுக்கும் தன் இயற்கை சக்திகளை வளர்ப்பதே லக்ஷியமாகும். சேற்றில் உழன்று சுகிக்கும் பன்றியைக் காட்டிலும், துக்கந்தால் வாடும் 'சாக்ரதரே சிரேஷ்டர்' என்று பெரிய ஆங்கில ஆசிரியர் மில் கூறினார். நமது அறிவால் சில துறைகளில் சுகம் அதிகரிக்கும். மற்றத் துறைகளில் துக்கம் பெருகும். இரண்டையும் சீர்தூக்கி எது அதிகமென்று கூற முடியாது. ஆனால் எது அதிகமாயினும் பாதகமில்லை. பகுத்தறிவு வளர்வதே முக்கியமானது. வெளி உலகத்தின் சூக்ஷ்மங்களையும், அந்தராத்மாவின் தன்மைகளையும் ஓயாமல் சிந்தித்துச் சிறிது மயக்கம் தெளிந்து மெய்யை உணர முயற்சி செய்தால் போதும். இந்த மார்க்கத்தில் நடப்பவன் முடிவில், கீதையில் சொல்லியபடி, விருப்பு வெறுப்பு இரண்டையும் விடுத்து உலக மாயையை ஓர் அத்தியாச்சரியமான ஈச்வர லீலை என்று உணர்ந்து, தன் கடமையைச் செய்து, தாமரை இலையின் பேரிலுள்ள நீர்த்துளிபோல் உலகில் ஒட்டாமல் காலம் கழிக்கக் கற்றுக்கொள்வான்.

3566

---

# புத்தகங்கள்

## புதிய சீனு — வெ. சாமிநாத சர்மா

சீனவும் சீன நாகரிகமும் மிகப் பழமையானவை. சென்ற நாலாயிரம் வருடங்களாகவே சீனர்கள் உலகத்தில் இருந்து வருகிறார்கள். அதற்கு நிகரான நாகரிகம் வேறு எதுவும் இல்லை. அன்பையும் அறத்தையுமே லட்சியங்களாகக் கொண்டு, புத்தர் பிரானின் போதனைகளை நடைமுறையில் கடைப்பிடித்து ஒழுகியவர்கள் சீனர்கள். அத்தகையவர்கள் இன்று வீழ்ச்சியுற்றிருப்பதற்குக் காரணம் என்ன? அதன் எதிர்காலம் எவ்வாறு இருக்கும்? சீனாவின் ஆரம்பகால சரித்திரத்திலிருந்து, புதிய சீனாவின் தோற்றம்வரை எல்லா விபரங்களும் இந்நூலில் அடங்கியிருக்கின்றன.

ரூ. 6-8-0

## தொகுப்பு — மஞ்சேரி எஸ். ஈச்வரன்

ஒன்பது கதைகள் அடங்கிய ஒரு சிறுகதைத் தொகுதி. ஒவ்வொன்றும் உணர்ச்சிக் குவியலிலே பூத்த மனோதத்துவ மலர் போன்றது. இனிய குணச் சித்திரங்கள்.

ரூ. 3-0-0

## மகாகவி பாரதியார் — வ. ரா.

பாரதியாருடன் பல வருஷம் நெருங்கிப் பழகிய அன்பர் வ. ரா. அவருடைய வாழ்க்கையில் நேர்ந்த ரசமான சம்பவங்களை எளிய நடையில் எழுதியிருக்கிறார்.

ரூ. 3-0-0

## திருமலை முருகன் பள்ளு — மு. அருணாசலம்

திருமலை முருகப் பெருமான்மீது, பெரியவன் கவிராயர் பாடிய நூல். எளிய உழவர் வாழ்க்கையை அழகிய முறையில் கூறுகிறது.

கலிகோ ரூ. 2-8-0 ராப்பர் ரூ. 2-0-0

## உலக நிலை — ராஜாஜி

உலகத்தின் பல்வேறு தேசங்களின் பொருளாதார நிலைமைகளை, திட்டமான ஆதாரங்களோடும் புள்ளி விவரங்களோடும் ராஜாஜி இந்நூலில் விளக்கியிருக்கிறார். கலிகோ ரூ. 2-0-0 ராப்பர் ரூ. 1-8-0

## நிழல்கள் — அ. சீனிவாசராகவன்

வாழ்க்கையில் என்றோ ஒருநாள் செய்த பாவம் பழையபடி உயிர்பெற்று, பயங்கரமான முறையில் தோன்றி நம்வாழ்க்கையை நாசமாக்கிப் பழி வாங்குகிறது. அதை ஆசிரியர் இந்நூலில் நன்கு சித்திரித்திருக்கிறார்.

கலிகோ ரூ. 1-12-0 ராப்பர் ரூ. 1-8-0

## நிழலருமை வெய்யிலிலே — மு. அருணாசலம்

இலக்கியரசம் மிக்க, எட்டுக் கட்டுரைகள் அடங்கிய நூல்.

ரூ. 1-4-0

## காற்றிலே மிதந்த கவிதை — மு. அருணாசலம்

வாய்மொழி இலக்கியம் என்று கூறப்படும் நாடோடிப் பாடல்களைப் பற்றிய சுவைமிக்க கட்டுரைத் தொகுதி.

ரூ. 1-0-0

---

**சக்தி காரியாலயம்**

சென்னை :: மதுரை